# பிறந்த 3ம் மாதம் தொடங்கும் முதல் திட உணவு குழந்தையின் வருங்கால வாழ்வையே தீர்மானிக்கத் தக்கது.

## பால் மட்டும் கொடுத்தால் போதாது என்கிறார்கள் டாக்டர்கள்



டாக்டர்கள் சிபாரிசு செய்வது

# ஃபாரெக்ஸ்

**விரைவான முழு வளர்ச்சிக்கான சரிவிகிதச் சத்து நிரவிய திட உணவு**



பச்சிளம் தேகமும் மூளையும் வேகமாக வளரத் துடிப்பவை. அதற்கு ஈடுகொடுக்கப் பால் மட்டும் போதுமானதாகாது. தாய்ப்பாலிலிருந்து திட உணவுக்கு மாறவேண்டும்—மூன்றாம் மாதமே. மென்றுதின்னப் பழக்குங்கள்... மேன்மையான வளர்ச்சிக்குத் திறவுகோலாக உதவும் திட உணவு ஃபாரெக்ஸ் ஒன்றுதான்—பச்சிளம் ஜீரண உறுப்புகளுக்கு உகந்தது.

**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்; காரணம்,**

தாய்ப் பால் விடுக்கும் தலையாய மாதங்களில் பாப்பாவின் பத்துவித வளர்ச்சிகளுக்கும் நிறைவுதரும் **ஒப்பற்ற சரிவிகிதச் சத்துணவு இதுவே.**

இரத்தச் செழிப்புக்கும் தென்புக்கும் நல்லுசிதமான அளவுக்கு (இதுபோன்ற வேறெந்தத் திட உணவிலும் அமையாத அளவுக்கு) இரும்புச் சத்து; எலும்புக்கு உறுதியும், பல்லுக்குப் பலமும் தரும் கால்ஷியம், வைட்டமின் D2; மூளையும் உடலும் விரைந்து வளர உகந்த புரத சத்துக்கள்; வளரும் உடம்புக்குத் தேவையான சக்தி— இவ்வளவும் அடங்கியது ஃபாரெக்ஸ்; எனவே... பாலூட்டலின் பழக்கத்தை மாற்றுவதற்கான வேறு எந்த திட உணவையும் விட அதிகமாக அநேகத் தாய்மார்கள் ஆதரிப்பது ஃபாரெக்ஸ். பழங்கள், காய்கறிகள், பருப்பு, இறைச்சி, முட்டை போன்ற எந்த முக்கிய உணவுடனும் கலந்து கொடுக்க இனிமையானது ஃபாரெக்ஸ். மென்றுதினப் பழக்க...கூடிய விரைவிலே குடும்ப உணவுகளிடம் குழந்தையை இனிதே வரவேற்க...

**அதி உன்னதமான முதல் திட உணவு ஃபாரெக்ஸ்.**

**இலவசமான எமது ஃபாரெக்ஸ் கைப் புத்தகம், 2-ரூபா தள்ளுபடித் திட்டம்— இரண்டையும் பற்றி அறிய, எழுதுங்கள்.**

(புத்தகம் எந்த மொழியில் எனக் குறிப்பிட்டு) உங்கள் பெயர், விலாசத்தை எழுதி, 25 பைசா தபால் வில்லையோடு அனுப்புக இம் முகவரிக்கு: தபால் பை நம்பர் 19119, பம்பாய் 400 025.




கிளாக்ஸோ

L.GF. 53-140 TH



# கல்கி

1976 டிசம்பர் 19
மார்கழி 4

## போடு புதிர்!

இதோ உள்ள படத்தை, ஒரே ஒருமுறை மட்டும் வெட்டி இடம் மாற்றி ஒட்டலாம். அப்படி ஒட்டின பிறகு ஒரே வடிவம் உள்ள மூன்று சம பாகங்களாகப் பிரித்துக்காட்ட உங்களால் முடியுமா?

- எஸ். விஸ்வநாதன்

விடை: 21-ம் பக்கம்

"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; நம்ம கதைகளும் கற்பனையே.

# உயர்தரமான சுவைக்கும் உண்மையான சிக்கனத்திற்கும்

## ரிக்கரி
### இன்ஸ்டென்ட்




## அரை டீஸ்பூன் அளவே போதும்

(தேவைக்கேற்ப குறைத்தோ அதிகமாகவோ உபயோகிக்கவும்)




**50 கிராம் சீசாவில் 37 கோப்பைகள்**

மற்றெந்த 50 கிராம் சீசாவை காட்டிலும் 7 கோப்பைகள் அதிகமாக ரிக்கரி அளிக்கிறது. ஏனெனில் ரிக்கரி ஸ்டிராங்கானது. இது சிக்கனத்திற்கு ஒரு சிறந்தவழி.



**அதிக ஸ்டிராங்கானது, அதிக மணமுள்ளதும்கூட:**

ருசியும், மணமும் மிகுந்த ஸ்டிராங்கான தயாரிப்பு. ஆகவே, ஒரு கோப்பை மணமும் ருசியும் மிக்க நல்ல காப்பிக்கு குறைந்த அளவு ரிக்கரியே போதும்.



**இப்போது ரிக்கரியின் விலை கணிசமாகக் குறைவு!**

50 கிராம் சீசாவுக்கு 50 பைசே விலை குறைக்கப்பட்டுள்ளது.

**ரிக்கரி**
**இன்ஸ்டென்ட்** வறுத்து அரைத்த காப்பியின் சுவையை ஏறக்குறைய அதே விலையில் உங்களுக்கு அளிக்கிறது

NRCM-27-75TAM

# வடிந்த வெள்ளம்; நீடிக்கும் நிவாரணம்

வெள்ளம் வடிந்துவிட்டது. அது ஏற்படுத்திய சேதம் இருக்கிறது; உருவாக்கிய துயரம் நீடிக்கிறது.

வெள்ள நிவாரணப் பணிக்கு, உதவியும் வெள்ளமெனப் பெருகி வந்ததைப் பார்த்துப் பூரிப்படைகிறோம்.

ராஜஸ்தான் சென்றிருந்த ஆளுனர் அங்கே நிகழ்ச்சிகளை ரத்து செய்துவிட்டு காந்தி ஓடோடி வந்தார். ஆளுநரின் விரைந்து திரும்பினார். திரு சஞ்சய் ஆலோசகர்கள், அரசாங்கப் பிரதம காரியதரிசி முதலியவர்கள் அரசு இயந்திரத்தைத் தீவிரமாக முடுக்கிவிட்டனர்.

பல்வேறு அரசியல் கட்சிகளும் போட்டி போட்டுக் கொண்டு நிவாரணப் பணிகளில் ஈடுபட்டன. பணம் கொடுத்தன. கட்சி அங்கத்தினர்கள் வீடு வீடாகச் சென்று துணி மணிகளும் இதர பொருள்களும் ஏழைகளுக்குச் சேகரித்து வந்தனர்.

போலீஸ், தீயணைப்புப் படை, என். ஸி. ஸி. ராணுவம் போன்ற அமைப்புக்கள் மற்ற எல்லோருக்கும் முன்னதாக விழிப்புடன் செயல்பட்டிருக்கவில்லையானால் மனித உயிர்களின் நஷ்டம் இதைக் காட்டிலும் மிக அதிகமாக இருந்திருக்கும். அதிலும் முக்கியமாக சென்னை காவல் துறையினர், படகுகள் கட்டு மரங்கள் கொண்டு வந்து, மூழ்கிக் கொண்டிருந்த மக்களை மீட்டும், மீட்புப் பணி முடிந்த பிறகு அல்லலுற்ற மக்களுக்கு உணவுப் பொட்டலங்களைச் சீராக வழங்கிச் செய்த தொண்டு பாராட்டுக்குரியதாகும். போலீஸார் தங்கள் குடும்பத்தினரே வெள்ளத்தில் அவதிப்பட்டபோது, அதனைப் பொருட்படுத்தாது, பொதுநலப் பணியே தமது முதற்கடமை என்று கருதிச் செய்த தொண்டு எல்லாருடைய போற்றுதலையும் பெற்றது. வெள்ளம் வடிந்த பிறகு பயங்கரத் தொத்துவியாதிகள் பரவா வண்ணம் சுகாதார இலாகாவினர் எடுத்துக் கொண்ட பணிகளுக்குப் போலீஸார் பெரிதும் உதவி யிருக்கிறார்கள். இப்படிப் பலவகைகளில் சென்னை போலீஸார் அரும்பணியாற்றி யிருக்கிறார்கள்.

மாணவர் சமுதாயம் காட்டிய அக்கறை அதிசயிக்க வைப்பது. வாய் வீச்சுடன் நில்லாமல் நேரடியாகப் பாதிக்கப்பட்ட இடங்களுக்கு நேரில் சென்று சேதமடைந்த சாலைகளைத் திருத்தினார்கள், குடிசைகளைக் கட்டிக் கொடுத்தார்கள். இப்படி உடல் உழைப்பை அவர்கள் நல்கியதைப் பார்த்தபோது பாதிக்கப்பட்டவர்களும் புத்துணர்ச்சி பெற்றார்கள்.

பெரிய பெரிய நிறுவனங்கள், தொழிலகங்கள் இந்த வெள்ளத்தால் சேதமுற்றன. அவற்றின் முதலாளிகள் அதிபர்கள் தங்களுக்கு ஏற்பட்ட நஷ்டத்தைக் கணக்குப் பண்ணித் தலையில் கை வைத்துக் கொண்டு அமர்ந்துவிடவில்லை. தங்களைவிட ஏழை எளிய மக்கள் எவ்வளவு அதிகமாகப் பாதிக்கப்பட்டுள்ளார்கள் என்பதைக் கண்டு மனமுருகி அவர்களுக்கு உதவ முன் வந்தார்கள். நன்கொடைகள் பெருமளவில் குவிந்துள்ளன.

அஹிம்சா பிரசார சங்கம் போன்ற எத்தனையோ பல சமூகப் பணி மன்றங்கள் உணவு உடை முதலியன கொண்டு போய் விநியோகித்தன. மருத்துவ உதவி மட்டின்றிக் கிடைத்திருக்கிறது.

இவர்கள் எல்லோரையும் பாராட்டி வாழ்த்துகிறோம். வெள்ளம் வடிந்தது. இனி மழை இராது. பனி பெய்யத் தொடங்கிவிட்டது என்ற நிலையில் நிவாரணப் பணிகளின் வேகம் குன்றலாம். இதற்கு அனுமதிக்கக் கூடாது. இயற்கையின் உத்பாதத்தால் வீடு இழந்த ஒவ்வொரு குடும்பமும், இருக்கும் சிறிதளவு உடைமைகளையும் இழந்த ஒவ்வொரு நபரும் புனர்வாழ்வு பெற்று மகிழும் வரை நிவாரணப் பணி முடிந்து விட்டதாகக் கருதுவதற்கில்லை. நற்பணிகள் தொடரட்டும்.

சென்னையில் ஏற்பட்ட வெள்ளத்தின் விளைவான சேதத்தையும் துயரத்தையும் வடக்கேயுள்ள தமிழர்கள் சரியாக உணர்ந்தார்களா, தெரியவில்லை. முழுமையாக உணர்வது சாத்தியம்

கல்கி மலர் 36 இதழ் 21



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

இல்லேதான். என்றாலும் சென்னேயி லிருந்து வெளியாகும் பத்திரிகைகளைப் பார்த்தால் ஓரளவேனும் புரிந்து கொள்ளலாம். இந்தத் தருணத்தில் அவர்கள் செய்ய வேண்டிய கடமை ஒன்றுண்டு.

வடக்கே பல்வேறு மாநிலத் தலை நகரங்களிலும் இதர பெரிய ஊர்களி லும் தமிழ்ச் சங்கங்கள் உள்ளன. பணி மன்றங்கள் இருக்கின்றன. கலைகளைப் போஷிக்கும் நிறுவனங்கள் உள்ளன. இவற்றைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் சென்னைவாழ் மக்களுக்கு இந்தச் சந் தர்ப்பத்தில் உதவ முன் வர வேண்டும். தங்களுக்குள்ளே பண வசூல் செய்வ துடன் வட இந்திய நண்பர்களின் உதவி யையும் கோர வேண்டும். ஒவ்வொரு சங்கமும் ஒரு தொகையை வெள்ள நிவாரண நிதிக்கு அனுப்ப வேண்டும். இதில் தொகை மட்டும் முக்கியமல்ல. 'சென்னைவாழ் நகர மக்களின் துயரில் நாங்களும் பங்கு கொள்கிறோம், அதனை நீக்க இயன்ற அளவில் முயல் கிறோம்' என்று காண்பித்துக் கொள் கிறார்களே அதுதான் பெரிது. வட இந்திய மக்கள் பலரது நன்கொடை களும் இதில் சேர்ந்துள்ளன என அறியும் போது வீடு வாசல் இழந்த ஆயிரமாயி ரம் ஏழைகளின் கண்கள் பனிக்கும்.

ஒருமைப்பாடு என்பதற்கு இதைவிட மேலான எடுத்துக்காட்டு என்ன இருக்க முடியும் ?

# பிச்சமூர்த்தியின் மறைவு

தமிழ் எழுத்துலகில் ஒரு புது திசைத் திருப்பம் ஏற்பட்ட காலத்துக்கு மணிக்கொடி சகாப்தம் என்று பெயர். இந்தச் சகாப்தத் தைத் தொடங்கிய தலைவர்களில் ஒருவரான திரு ந. பிச்சமூர்த்தி தமது 77வது வயதில் சமீபத்தில் காலமானார் என்ற செய்தி துயரம் தருவதாகும். திரு பிச்சமூர்த்தி வழக்கறி ஞர். ஹிந்து அற நிலையத் துறையில் பல கோயில்களின் நிர்வாக அதிகாரியாகப் பணியாற்றியவர். சதா சிந்தனை அலைகளில் மிதப்பவர். பல அரிய கதைகள் எழுதியவர். புதுக் கவிதையின் தந்தையாவார். இலக்கண மரபை எதிர்த்த அல்லது கைவிடப்பட்ட கவிதை மரபைத் தொடங்கியவர். எனினும் இதற்கும் ஒரு மரபும் இலக்கணமும் உண்டென் பார். பல சந்தர்ப்பங்களில் அவர் பேச்சும் எழுத்தும் புரியாதவை போலத் தோன்றும். அவர் எழுத்தைச் சற்று ஆழ்ந்து படித்தால், நவநவமான கருத்துக்கள் வெளிப்படும். அவர் எத்தகைய படிப்பாளி, சிந்தனையாளர் என்று வியக்கச் செய்யும். அத்தகைய அறிஞரை இழந்து தமிழ் எழுத்துலகம் பெரும் நஷ்டம் அடைந்து விட்டது. அவருடைய குடும்பத்தா ருக்கு நமது அனுதாபங்கள்.

**ராஜாஜியின் சிந்தனைகள்**

சங்கீதம், சமயத்திலிருந்து பிறந்தது. இன்றும் சங்கீதத்தின் ஆணி வேர், சமயத்தில்தான் இருக்கிறது. சங்கீதம் புலனுணர்ச்சிக்கு மட்டும் ஏற்பட்ட கலையல்ல. ஆகவே, சங்கீதம் நமது மாணவ — மாணவியர்களின் கல்வித் திட்டத்தில் சேர்ப்பது மிக அவசியம். நமது பண்பாட்டின் மிக முக்கியமான அம்சம் சங்கீதம். மீண்டும் மீண்டும் ஒழுக்க நெறிகளை வற்புறுத்திச் சொல்வதைவிட, நல்ல சங்கீதத்தில் பயிற்சி அளித்தால் நல்ல ஒழுக்க நெறிகளை உருவாக்குவதில் பெரிதும் உதவும். சங்கீத மும், நாட்டியமும், பக்தியும் சீலமும் தோற்றுவிக்க நல்ல சாதனமாகும். குழந்தை களுக்குச் சங்கீதத்திலும் நாட்டியத்திலும் பயிற்சி அளிக்க ஆகும் செலவைப்பற்றிப் பெற்றோர்கள் தயங்கக் கூடாது.

× ×× ××

இங்கிலீஷ்காரர்கள் போய் விட்டார்கள் என்பதால் ஆங்கிலத்தை விட்டு விட வேண்டும் என்பதில்லை. இங்கிலீஷ்காரர்கள் வெளியேறியபோது, அவர்களோடு ரயில்வே என்ஜின்களையுமா அனுப்பிவிட்டோம் ? இன்றும் நம்மோடு ரயில்களும் தந்திகளும் இருக்கின்றன. நமது நீதிமன்றங்களை வைத்திருக்கிறோம்; இங்கிலீஷ் நீதிமன்ற முறையை வைத்திருக்கிறோம். ஏன் ? அவை நமக்குப் பெரிதும் உபயோக மாக இருக்கின்றன என்பதால் வைத்திருக்கிறோம். அப்படியே ஆங்கில மொழியையும் நாம் வைத்திருப்போமாக. தந்தியையும் ரயிலையும்விட ஆங்கிலம் நமக்கு மிக அவசியம், மிகவும் உபயோகமுள்ளது.

# சுழற்சி நிற்குமா?



# கண்டனமும் பாராட்டும்








# தாய்மார்களே !

# டாக்டர்கள் குழந்தை உணவில் எதை எதிர்-பார்க்கிறார்களோ,

## அது அமுல்ஸ்ப்ரேயில் உள்ளது

**அமுல்ஸ்ப்ரேயில் உங்கள் குழந்தை ஆரோக்கிய மாகவும் வலுவுடனும் வளருவதற்குத் தேவை யான வைட்டமின்கள், கனிஜப் பொருட்கள் மற்றும் புரதங்கள் அடங்கியுள்ளன.**

வைட்டமின்கள்—நோய்த் தொற்றை எதிர்க்க, நன்கு பசி எடுக்க, ஆரோக்கியமான நரம்புகள், ஈறுகள், கண்கள் மற்றும் பற்களுக்கு. தியாமின்—சீரண சக்தியை வளர்க்க, உடல் உறிஞ்சிக் கொள்ள, ஆரோக்கியமான சருமத்துக்கு. கால்ஷியம், பாஸ்பரஸ் போன்ற கனிஜ சத்துக்கள் எலும்புகள் சீராக அமைய. இரும்புச் சத்து—ரத்த அமைப்புக்கு. புரதம், செல் அமைப்புக்கும் வளர்ச்சிக் கும் அடிப்படையானது. அமுல்ஸ்ப்ரேயில் தரமுயர்ந்த புரதங்கள் போதிய அள வில் இருக்கின்றன.

**அமுல்ஸ்ப்ரேயை, பிறந்து சில நாட்களான குழந்தைகள் கூட சீரணிக்க முடியும்**

ஒவ்வொரு சொட்டுப் பாலும் மிக நுண்ணிய பவுடராக மாற்றப்படுகிறது. கொழுப்பும் அவ்வாறே மாற்றப்படுகிறது. இதனால் குழந்தை இதை எளிதில் சீரணிக்க முடிகிறது.

**அமுல்ஸ்ப்ரே விரைவில் எளிதாகத் தயாரிக்க வல்லது**

ஸ்ப்ரே-ட்ரை முறையால் தயாரிக்கப்படும் நுண்ணிய பவுடரான அமுல்ஸ்ப்ரே சுவையானது; விரைவில் தயாரிக்கக்கூடியது; எளிதில் கரைகிறது. இது பாட்டிலின் நிப்பிள் துவாரத்தில் அடைத்துக் கொள்வதில்லை. எனவே குழந்தை அதிக காற்றை விழுங்குவதில்லை.

**பாலஅமுல் மற்றும் உங்கள் வளரும் குழந்தை**

3-வது மாதத்தில் (அல்லது அவன் பெரியவனாகிவிட்டான் என்று டாக்டர் கூறும்போது) உங்கள் குழந்தைக்கு, அமுல்ஸ்ப்ரேயைத் தவிர, பாலஅமுல் தானிய உணவு தரத் தொடங்குங்கள்.

பாலஅமுல், முன்கூட்டியே பாலில் சமைக்கப்பட்ட குழந்தை உணவு. மற்ற துணை உணவுகளைக் காட்டிலும் பாலஅமுலில் அதிக புரதமும், வைட்டமின் ஏ-யும் உள்ளன. தவிர, இந்த வயதில் குழந்தை வேகமாக வளருவதற்கு அவசியமான, நன்கு சமநிலை பெற்ற முழுமையான ஃபார்முலா பாலஅமுலில் அடங்கி இருக்கிறது. எனவே உங்கள் குழந்தைக்கு பாலஅமுல் உகந்தது.

**இலவசம்:**

அமுல் குழந்தை புத்தகம் மற்றும் பாலஅமுல் புத்தகம்—அதிக விவரங்களுக்கு, எழுதவேண்டிய முகவரி: த.பெ. எண் 10124, பம்பாய் 400 001. 60 பைசா தபால் தலையுடன் உங்கள் முழு முகவரியையும் அனுப்புக.





Indian Standard Institutio




ASP-AS 28 A

# அமுல்ஸ்ப்ரே

**தாய்ப்பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது**



விற்பனைக்கு விடுப்போர்: குஜராத் கோ-ஆப்பரேட்டிவ மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிமிடெட், ஆனந்த்.

# ஜீவகாருண்யம்




ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி
காமகோடி சங்கராசாரிய
ஸ்வாமிகள்



எல்லாப் பரோபகாரங்களையும் விட உத்தமமானது ஒரு ஜீவனைப் பரமாத்மாவிடம் சேர்க்கிறதுதான். ஆகையால், அந்திமத்தில் ஒரு ஜீவன் பகவானை நினைக்கும்படியாக நாம் பண்ணி, அதனால் பகவான் அந்த ஜீவனை எடுத்துக் கொள்ளச் செய்துவிட்டால் அதைப் போன்ற உபகாரம் வேறே எதுவும் இல்லை.

கடைசி கால ஈச்வர ஸ்மரணை ஜன்மாவை அப்படியே அழித்துவிடாவிட்டால் கூடப் பரவாயில்லை. நிச்சயம் அது பாபத்தைப் பெரிய அளவுக்கு அலம்பி விட்டுவிடும். இதைப் பற்றிச் சந்தேகமில்லை. பகவந்நாமா மனசுக்கு உள்ளே ஊறி விடுகிறபோது பாபத்தை நிச்சயம் கழுவிவிடும். ஆனதால், பகவந்நாமாவோடு கண்ணை மூடுகிறவன் ஜன்மாவே இல்லாமல் விடுபட்டு விடுகிறான் என்று வைத்துக் கொள்ளாவிட்டாலும், மறுபடியும் பாப ஜன்மா எடுக்கவே மாட்டான்; நல்ல புண்ய ஜன்மாவாக எடுப்பான்.

புண்ய ஜன்மா என்றால், பணம், காசு, அழகு, உசந்த ஜாதி, இதுகளா? இல்லை. இந்த ஜன்மா முடிவிலே வந்த பகவத் ஸ்மரணை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து அடுத்த ஜன்மாவிலும் எப்போது பார்த்தாலும் இருக்கும்படியான சூழ்நிலையும் மனநிலையும் கொண்டதுதான் புண்ய ஜன்மா. அப்படி எடுத்து அடுத்த ஜன்மத்தோடாவது சொந்த முயற்சியினாலேயே ஸம்ஸார நிவர்த்தியைச் சம்பாதித்துக் கொள்ள, ஒரு ஜீவனுக்கு இந்த ஜன்மத்திலேயே நாம் நம்மாலான முயற்சியைப் பண்ண வேண்டும்.

இந்த மகா பெரிய தர்மத்தை, நான் முதலில் சொன்னேனே, வார வழிபாடு, ஜீவாத்ம கைங்கர்யம், மற்ற பரோபகாரங்களுக்காகச் சங்கமாகச் சேர வேண்டும் என்று, இந்தச் சங்கத்துக்காரர்கள் தவறாமல் செய்ய வேண்டும். 'இந்த ஈடில்லாத உபகாரத்தைப் பண்ணியே தீர்வது' என்று சங்கத்துக்காரர்கள் தீர்மானம் பண்ணிக்கொள்ள வேண்டும்.

தங்கள் கிராமத்தில் அல்லது பேட்டையில் ஒருத்தன் சாகிற நிலையில் இருக்கிறான் என்று தெரிந்தால் அங்கே சங்கத்திலிருந்து ஒருத்தரோ சிலரோ போகவேண்டும். வீட்டிலே இல்லாமல் ஆஸ்பத்திரியிலோ, ஜெயிலிலோ உயிரை விடுகிறவர்களும் உண்டு. எனவே இப்பேர்ப்பட்ட இடங்களுக்கும் தங்களை அநுமதிக்கும்படியாக அந்தந்த அதிகாரிகளிடம் பெர்மிஷன் வாங்கி வைத்திருக்க வேண்டும். அங்கே வெறும் கையோடு போகக் கூடாது. நாமம்தான் சகல ரோக நிவாரணி என்பது வாஸ்தவமே. அதற்கு வெளி வஸ்து ஒன்றும் வேண்டியதில்லைதான். ஆனாலும், ஸ்தூலமாகப் பிரஸாதம் என்று ஒன்றைக் கொண்டு போய்க் கொடுத்தால் அதற்கும் ஒரு தனி சக்தி உண்டுதான்; அது சாகிற ஜீவனுக்கு இன்னும் ஜாஸ்தி ஆறுதலாக இருக்கும். ஆனதால், முதலிலேயே கையில் சிவன்கோவில் விபூதி, பெருமாள் கோயில் துளசி 'ஸ்டாக்' வைத்திருக்க வேண்டும். அம்பாள் கோயில் குங்குமம், முருகன் அல்லது பிள்ளையார் கோவில் விபூதி என்று எது இருந்தாலும் சரி. சிவபரமாகவும், விஷ்ணுபரமாகவும் ஏதாவது இரண்டு கோயில் பிரஸாதம் ஸ்டாக் இருக்க வேண்டும். கங்கா தீர்த்தமும் வைத்திருக்க வேண்டும். மரணமடைகிற ஜீவன் சைவ மதமோ, வைஷ்ணவ மதமோ அதைப் பொறுத்து அந்தந்தப் பிரஸாதத்தை எடுத்துப் போக வேண்டும். கங்கா தீர்த்தம் எல்லோருக்கும் பொது. அநேக சைவர்கள் துளஸிப் பிரஸாதத்தையும் ஆட்சேபிக்க மாட்டார்கள். இப்போதெல்லாம் வைஷ்ணவர்கள்கூட ஈச்வரன் கோவில் பிரஸாதம் என்றால் விபூதி வேண்டாம் என்பதில்லை. என்னிடமே கூடச் சில வைஷ்ணவர்கள் விபூதிப் பிரஸாதம் கேட்டு வாங்கிக் கொண்டு போகிறார்கள். ஆனால் நாம் அவரவர் அபிப்ராயத்துக்கு அநுகூலமாகத்தான் பிரஸாதத்தைத் தரவேண்டும். மரண சமயத்திலே ஓர் இடத்திலே போய் ஸித்தாந்தச் சண்டைகளைக் கிளப்பக்கூடாது. யாருக்கு எது உசிதமாக இருக்குமோ, அப்படிப்பட்ட பிரஸாதமாக எடுத்துக்கொண்டு போக வேண்டும்.

விபூதிப் பிரஸாதம் என்பது சிவன் கோயிலில் இருக்கும் தக்ஷிணாமூர்த்திக்கோ, அல்லது தனிக் கோயிலில் இருக்கிற பிள்ளையாருக்கோ, சுப்பிரமண்ய ஸ்வாமிக்கோ அபிஷேகம் பண்ணப்பட்ட விபூதியாக இருக்க வேண்டும். அம்பாள்—சாக்ஷாத் பராசக்திக்குப் பாதத்தில் அபிஷேகம் செய்யப்பட்ட தீர்த்தமும் கங்கா ஜலத்துடனே. கங்கா ஜலம் கிடைக்காவிட்டால் அதற்குப் பதிலாகவோ வைத்திருந்து, மரிக்கிறவனுக்குக் கொடுக்கலாம்.

---

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**

இதேபோல் விஷ்ணுபரமாக, பெருமானுக்கு அர்ச்சனை செய்த துளசியைக் கொண்டு வந்து உலர்த்தி ஸ்டாக் வைத்துக் கொள்ள வேண்டும். பெருமாள் பாதத்தில் அபிஷேகமான தீர்த்தமும் கொடுக்கலாம். கங்கை கிடைக்காவிட்டால், அதற்குப் பதில் வைஷ்ணவர்களுக்குப் பெருமாள் பாத தீர்த்தம் தரவேண்டும். பெருமானுக்கு நித்யப்படி முழு அபிஷேகம் இராது. திருமஞ்சனம் என்று சில நாட்களில்தான் செய்வார்கள். அதனால் மூர்த்தி முழுதிற்கும் அபிஷேகமாக இல்லாமல், பாதத்தில் மட்டும் அபிஷேகம் பண்ணுவித்து அந்தத் தீர்த்தத்தை வாங்கி ஸ்டாக் வைத்துக் கொள்ள வேண்டும். எதற்கும் கங்கை கைவசம் இருப்பது ரொம்ப நல்லது.

சாவு என்றால் எவனுக்கும் பயம்தான். ஆயுள் முழுக்க நாஸ்திகனாக இருந்தவன் கூட அந்திமக் காலத்தில் ஏதோ ஒரு பெரிய சக்தியின் கையில் தான் தானிருக்கிறோம் என்று கொஞ்சமாவது தெரிந்து கொள்ளாமலிருக்க மாட்டான். அந்த நேரத்திலே பயத்தைப் போக்க அந்தச் சக்திதான் கதி என்ற எண்ணம் எவனுக்கும் வராமல் இருக்காது. எவனுமே ஈச்வர தியானத்தோடுதான் சாக விரும்புவான் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. ஆனதால் நாம் அவனுக்கு உபகரிப்பதை அவன் நிச்சயம் ஏற்றுக்கொள்ளத்தான் செய்வான். அவனுடைய பந்துக்களும் இந்தக் கைங்கரியத்தை வரவேற்பார்கள். சில கிழம் கட்டைகள் போகாதா என்று இருக்கும்போது பந்துக்கள் வைத்தியம் வேண்டுமானால் பார்க்காமல் இருக்கலாம். ஆனால் ''புறப்பாடு'' நன்றாக நடப்பதற்கே நாம் உபகாரம் பண்ணுகிறோம் என்பதால் எவரும் ஆட்சேபிக்க மாட்டார்கள். அதிலும் அவர்களுக்கு நாம் எந்தச் செலவும் வைக்காததால் நிச்சயம் ஆட்சேபிக்க மாட்டார்கள். ஆனதால் நாம் இப்படிப்பட்ட தொண்டு செய்கிறோம் என்று தெரிந்து விட்டால், அவர்களே நம்மைக் கூப்பிடுவார்கள். கூப்பிடாவிட்டாலும் நாம் போக வேண்டும். அவர்கள் கடும் நாஸ்திகர்களாக இருந்து ஆட்சேபித்தால் கொஞ்சம் எடுத்துச் சொல்லிப் பார்க்கலாம். அப்படியும் கேட்கா விட்டால் திரும்பி விடலாம். ஆனால் அப்போதும் கூடக் கோபம் இல்லாமல், சாகிற ஜீவனுக்காகப் பிரார்த்தனையை நமக்குள் செய்து கொள்ள வேண்டும். மொத்தத்தில், மான, அவமானம் பார்க்காமல் நம்மால் முடிந்த தொண்டைச் செய்யப் பாடுபட வேண்டும். மான, அவமானம் பார்க்க ஆரம்பித்து விட்டால் அது தொண்டே இல்லை.

செய்ய வேண்டியது என்னவென்றால், பிராணவஸ்தையில் இருக்கிறவர்களிடம் கோயில் பிரஸாதத்துடன் போக வேண்டும். அவர்களுக்குக் கங்கா தீர்த்தம் கொடுக்கவேண்டும். விபூதி இடவேண்டும். துளசியை வாயில் போட வேண்டும். அவர்கள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு 'சிவ சிவ சிவ சிவ' என்றோ 'ராம ராம ராம ராம' என்றோ உரக்கச் சொல்ல வேண்டும். உரக்கச் சொல்ல வேண்டியது அவசியம் — ஜீவன் காதிலே அது பட்டு மனசைத் திருப்ப வேண்டுமாதலால். உயிர் போகும்வரையில் இப்படி நாம ஜபம் செய்தால் ரொம்ப சிரேஷ்டம். ஆனால் பிராணவஸ்தையிலேயே ஒரு ஜீவன் அது பாட்டுக்கு மணிக்கணக்காக இழுத்துக் கொண்டிருந்தால் என்ன பண்ணுவது? நமக்கு மற்ற காரியம் இருக்கத்தானே செய்யும்? அதனால், பக்கத்திலே பந்துக்களில் யாராவது ஒருத்தர் முறை போட்டுக் கொண்டு உட்கார்ந்து நாம ஜபம் பண்ணும்படியாக ஏற்பாடு செய்து விட்டு நாம், 'நம் கடமையைக் கொஞ்சமாவது செய்தோம்' என்று புறப்படவேண்டும். குறைந்த பட்சம் சிவ நாமாவோ, ராம நாமாவோ 1008 தடவையாவது நாம் ஒரு ஜீவனுக்காகச் சொல்ல வேண்டும். இப்படிப் பல பேர் சொன்னது அந்த ஜீவனுக்குள்ளே போய்த் தானாக அது உள் நினைவில் பகவானை நினைத்துக்கொண்டிருக்கும்படியாகப் பண்ணியிருக்கும் என்று வைத்துக் கொள்ளலாம். ஆனால் இது இரண்டாம் பட்சம்தான். நாம் கடைசி வரை யிருக்க முடியாமல் வந்து விட்டாலும் கூட, ஒரு ஜீவன் பிரிகிறபோது அங்கு பகவந் நாமா இருக்கும்படியாக அதனுடைய பந்துக்களையாவது ஜபிக்கும்படியாக ஏற்பாடு செய்து விட்டு வரவேண்டும். (தொடரும்)



பி.வி.ஆர் எழுதும்
மதுர நாயகி
இனிய சமூக நாவல்
கல்கி
ஜனவரி
2உ
இதழில்
ஆரம்பம்



# ஐம்பது காணும் அகாடெமி

கர்நாடக இசை நிறுவனங்களை நினைத்தவுடன் முதலிடம் பெறும் பெருமை சென்னை மியூஸிக் அகாடெமி என்னும் ஸங்கீத வித்வத் சபைக்கே உரித்தானதாகி விட்டது. இன்று பொன் விழாக் கண்டு நம் போற்றுதலைப் பெறும் இந்த ஸ்தாபனத்தின் தோற்றுவாய் சுவாரஸ்யமானது.

1927-ல் சென்னையில் நடைபெற்ற இந்திய தேசிய காங்கிரஸ் மகாநாட்டின் ஓர் அங்கமாக மக்களை ஈர்க்கவும் இன்புறுத்தவும் இசைக் கச்சேரிகள் நடத்த உத்தேசித்தனர். இதற்காக ரூபாய் ஐந்நூறு ஒதுக்கினர். ஆனால் உத்தேசமானது காரியமாக உருப்பெறுகையில் விகவ



ரூபமே பெற்று விட்டது. அந்த ஐந்நூறு ரூபாய் டிக்கெட் அச்சடிப்பதற்கும் விளம்பரத்துக்குமே செலவாகி விட்டது. அது வரை மக்கள் அறிந்திராத ''ஸீரீஸ்'' கச்சேரிகளுக்கான டிக்கெட்டுகளை ரஸிகர்கள் ஆர்வமுடன் வாங்க, வஸ்ளிசாக ரூ. 13,000 வசூலாயிற்று. அதிலே கச்சேரிச் செலவுகள் போக ரூ. 5000 மிச்சமாகவும் கிடைத்தது.

சங்கீத ஸீரீஸில் நம் மக்களுக்குள்ள ஸீரியஸான பற்றுதலை அமரர் ஸ்ரீ சத்யமூர்த்தி, டாக்டர் யு. ராமராவ் போன்ற ரஸிகப் பிரமுகர்கள் புரிந்துகொண்டு, இதை ஒரு வருஷாந்தர வைபவமாகவும், இதற்கெனவே ஒரு ஸ்தாபனத்தை நிறுவவும் தீர்மானித்தார்கள். இதுதான் தற்போது அண்டர் புகழும் அகாடெமியாகப் பரிணமித்தது.

கர்நாடக இசை நிறுவனங்கள் என்ற மாத்திரத்தில் மியூஸிக் அகாடெமியை நினைப்பது போலவே, மியூஸிக் அகாடெமி என்ற மாத்திரத்தில் நம் நினைப்பில் முதற்கண் நிற்பவர் ஸ்ரீ கே. வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர். அகாடெமி வளர்ச்சிக்கே தம் ஆயுளை அர்ப்பணித்துக்கொண்டவர் அவர்.

அகாடெமி நல்ல நல்ல கச்சேரிகளை மக்களுக்கு வழங்க வேண்டும், அதோடு கூட சங்கீத சாஸ்திர விஷயங்களையும் அலசி ஆராய்ந்து முடிவுகள் காண வேண்டும், கலைஞர் – அறிஞர் – ரஸிகர் ஆகிய மூன்று சாராருக்கும் பயனுள்ளதாக விளங்கவேண்டும் என்ற திட்டத்தின் கீழ் இசைக் கச்சேரிகள் மட்டுமின்றி, வித்வான் மகாஜனங்களின் ''ராக லக்ஷணம்'' முதலான விவாதங்களும் இசை மகாநாடுகளில் முக்கியத்துவம் பெறலாயின. வட இந்திய இசை, அந்த சங்கீத முறையைக் கர்நாடக இசையுடன் தொடர்புறுத்திச் செய்யும் ஆராய்ச்சி ஆகியனவும் காலப் போக்கில் இடம் கொண்டன. சமீப காலமாக வெளி நாட்டு இசையறிஞர்களும் இவ்விவாதங்களுக்கு ருசி கூட்டி வருகின்றனர்.

கர்நாடக இசையைச் சம்பிரதாய வழுவின்றிப் போதிக்க ஒரு கல்லூரியும், பரத நாட்டிய வகுப்புக்களும் அகாடெமி ஆதரவில் தொடங்கப்பட்டன. டைகர் வரதாச்சாரியார், ஹரிகேசவநல்லூர் முத்தையா பாகவதர், முடிகொண்டான் வேங்கடராமையர்

ஆகியோர் முதல்வராக இருந்துள்ளனர். ஸ்ரீமதி பாலசரஸ்வதி பரதக் கலையைப் பயிற்றுவித்து வருகிறார். இசை மாணுக்கருக்கு மிகவும் உபயோகமான பல நூல்களும் அகாடெமியால் வெளியிடப்பட்டுள்ளன.

முதலில் ரிப்பன் கட்டிடத்திலும், பிறகு மயிலை சுந்தரேச்வரா ஹால், பி. எஸ். ஹைஸ்கூல் ஆகிய இடங்களிலும் மாநாடுகள் நடந்தன. கர்நாடக இசையின் இத்தலையான நிறுவனத்துக்குச் சொந்தக் கட்டிடம் எழுப்பும் திட்டம் பிற்பாடு பிறந்தது. இன்று மௌபரீஸ் சாலையில் கம்பீரமாக நிற்கும் அகாடெமியின் சொந்தக் கட்டிடம், செங்கல்லாலும், மரத்தாலும் மட்டும் உருவானதல்ல. காலஞ்சென்ற ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார், கஸ்தூரி ஸ்ரீநிவாஸன், ஆர். கே. மூர்த்தி போன்றவர்களின் ஆர்வமும், உழைப்பும், உதவியும் சேர்ந்தே இக்கட்டிடம் எழும்பிற்று. கட்டிடத்தின் மைய மகா மன்றம் டி. டி. கே.வின் பெயரில் அமைந்திருப்பது மிகப் பொருத்தமே.

ஒரு பிரபல இசைக் கலைஞரைத் தேர்வு செய்கிறார்கள். அவருக்குச் சூட்டப்படும் விருது தான் ''சங்கீத கலாநிதி'' என்பது. பழங்காலத்தில் ஒரு மன்னன் அச்வமேதம் செய்து 'ஸம்ராட்' என்று பெயரெடுப்பதே பெருமை எனக் கொண்டாற்போல், இன்று கர்நாடக இசைக் கலைஞர்கள் பெறக் கூடிய அதி உன்னத விருது 'ஸங்கீத கலாநிதி' என்று ஆகியிருப்பதிலிருந்தே அகாடெமிக்குள்ள கௌரவமான ஸ்தானத்தை உணரலாம்.

இந்தக் கௌரவத்தை அது எந்த நாளும் காத்து, நமது இசையின் தூய உருவை உலகுக்குக் கொடுத்து வர வேண்டுமென இப்பொன் விழாவிலே பிரார்த்திக்கிறோம். அகாடெமிக்கு சதாயுஸ் என்ன, சகஸ்ராயுஸ் கோரி வாழ்த்துகிறோம்.

✖ கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை சதஸுக்குத் தலைமை வகித்த ஆண்டில்... கவர்னர் பவநகர் மகாராஜா, டி. எல். வேங்கடராம அய்யர், நடராஜன், கே. வி. கே., செம்மங்குடி, மகாராஜபுரம் முதலியோரைக் காணலாம்.

✖ புதிய கட்டிடத்தை மைசூர் மகாராஜா திறந்து வைக்கிறார்.



✖ ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரி படத்தை காமராஜ் திறந்து வைக்கிறார். அருகே திரு வே. ராகவன்.



✖ புதிய கட்டிடத் திறப்பு விழா நிகழ்ச்சியின்போது வித்வான்கள் சாஸ்திரோக்தமாகப் பாடுகிறார்கள்.

அகாடெமியைப் பற்றி என்னுரையில் ஸ்ரீ டி. எல். வேங்கடராமய்யர், டி. வி. சுப்பாராவ், வி. சந்திரசேகரன், டாக்டர் வே. ராகவன் போன்றவர்களையும், இன்னும் அந்த ஸ்தாபனத்துடனேயே தம்மை இழைத்துக் கொண்டு அதன் வளர்ச்சிக்குப் பணி புரிந்த, புரியும் பலரையும் போற்றக் கடமைப்பட்டிருக்கிறோம். தற்போது ஸ்ரீ டி. எஸ். ராஜம் அவர்கள் தலைவராக இருந்து அரும்பணி புரிகிறார்.

இது நிறுவனத் தலைமை. இது தவிர வருடாந்தர விழாத் தலைவராக ஆண்டுதோறும்

ஆக்கசக்தி நெருக்கடியினால் ஏற்பட்ட சங்கடமான நிலை டாடா ஸ்டீலிலுள்ள எங்கள் இளம் நிபுணர்களுக்கு அதைத் திறம்பட சமாளிக்கும் ஆற்றலை அளித்தது.

ஆக்கசக்தி உபயோகத்தில் சேமிப்பு பற்றிய தீவிரமான ஆராய்ச்சிகள் பல புது வழிகளைப் புலப்படுத்தியுள்ளன. கம்பஸ்சன் ஏர் கண்ட்ரோல் ஸிஸ்டம்களைப் பல தொழிலிடங்களில் நிறுவி வியர்த்தமாகும் காஸினால் ஏற்படும் உஷ்ண நஷ்டத்தைக் குறைக்க வழி செய்யப்பட்டுள்ளது; தவிர எரிபொருள் தரமும் சீராக்கப் பட்டுள்ளது. தேவையான இடங்களில் வேஸ்ட்ஹீட் ரெகூப்பரேட்டர் ஸிஸ்டம்கள் மீண்டும் நிறுவப்பட்டிருப்பதோடு அவற்றின் செயலாற்றலை உச்சநிலைப் படுத்துவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. ஃபர்னஸ்களில் இன்ஸுலேஷன் செய்யப்பட்டதோடு அவற்றில் காலத்திற்கேற்றவாறு புதுமைகள் செய்யப்பட்டுள்ளன. உச்சநிலையில் மறு-உபயோக முறைகளின் பயனாக குளிர்ச்சிக்கான தண்ணீர் பம்ப் செய்வது குறைக்கப்பட்டுள்ளது.

மொத்த உற்பத்திச் செலவில் மூன்றில் ஒரு பங்கு ஆக்கசக்திக்காகச் செலவிடும் தொழிற்துறையில் இந்த சேமிப்புகள் மிக மதிப்புள்ளவையாகும். காரணம், தாங்கமுடியாத ஆக்கசக்திச் செலவின் பளுவை சமாளிக்க இவை உதவுகின்றன.

இளமை மிடுக்கோடு இருப்பவர்கள் என்றென்றும் புதுப்புது சோதனைகளை வரவேற்பார்கள்.



## புதுப்புது சோதனைகள் எங்களுக்கு இளமையூட்டுகின்றன



டாடா ஸ்டீல்

TIS-1247 A

# இசைப் பூங்காவில் ஒரு இளசு

"ஏற்கெனவே அந்தக் குடும்பம் அக்னி ஜ்வாலை. அதிலே நீங்கள் வேறு புயல் வீசவதாவது? கூடவே கூடாது'' என்று கூறி, காஞ்சிபுரம் ஸ்ரீ நாயனாப் பிள்ளையைத் தடுக்க முயன்றார் அந்நாளில் பிரபல மிருதங்க வித்வானாக இருந்த ஸ்ரீ பைரவப் பிள்ளை. இவர் மட்டுமல்ல. இன்னும் அநேக வித்வான்களும் ஆட்சேபம் தெரிவித்தனர்.

நாயனாப் பிள்ளையோ மலையாக உறுதியுடன் நின்றார். ''எங்கள் இரண்டு குடும்பங்களும் அந்நியோந்நியமானவை. அவர்கள் என்னை நாடுவதே தேவையில்லை. நாடிய



வீணை
தனம்மாள்



ஸ்ரீமதி
பிருந்தா

பின்பு நான் எக்காரணத்தைக் கொண்டும் நிராகரிக்க முடியாது'' என்று தீர்மானமாகக் கூறி விட்டார்.

எனவே ஏழு வயசுக் குழந்தை பிருந்தாவும், அவளைவிடக் குழந்தையான முக்தாவும் ஸ்ரீ நாயனாப் பிள்ளையிடம் ஸங்கீத சிக்ஷை தொடங்கினர். கங்கையும் யமுனையும் கலப்பது போல், மகத்தான வீணை தனம்மாளின் பத்ததி அவருடைய பேத்திகள் மூலம் நாயனாப் பிள்ளை பத்ததியில் சேர்ந்தது.

பிருந்தாவின் அதிலாகவமான, பரம ச்ருதி லயமான, கன-நய பிரு-கரு வாய்ந்த சாரீரம்; புத்தி கூர்மை; ஸ்வர ஞானம்; லய முடுக்கு முதலியன நாயனாப் பிள்ளையை வெகுவாக உற்சாகப்படுத்தின. தமது விசேஷச் சரக்கான தான விற்பன்னத்தில் குழந்தையைப் 'படு'வாகத் தேர்ச்சியுறச் செய்தார். கற்றுக் கொடுத்ததைக் கர்ப்பூர மூளையுடன் பிருந்தா - முக்தாவும் பிடித்துக் கொண்டு ஜொலித்தனர். திருரு தாளங்களில் திருப்புகழ்கள் பாடுவதில் சிறப்பு எய்தினர்.

கான் ஸாஹேப் அப்துல் கரீம் கான் அந்நாளில் ஹிந்துஸ்தானி ஸங்கீத சிம்மமாகக் கொடி கட்டிப் பறந்தவர். சிம்ம சொப்பனமாக மற்ற வித்வான்களை அச்சுறுத்துவதில் ஏனோ இந்த மகா கலைஞருக்குப் பெரிய ருசி இருந்தது. கர்நாடக ஸங்கீதக் கலைஞர்களை மானபங்கம் செய்ய வேண்டும் என்ற 'திவ்ய மான' எண்ணத்துடனேயே சென்னை, திருவல்லிக்கேணியில் இவர் வந்து தங்கியதாகச் சொல்லப்படுகிறது. தாம் வளர்த்த ராஜ பாளையம் நாயைக் கூப்பிட்டு வைத்துக் கொண்டு இரட்டைத் தம்புராக்களை மீட்டு வாராம். அந்தச் சுவானம் பத்து நிமிடங்கள் ச்ருதியிலேயே ஊறியிருந்து விட்டு, பிறகு இரட்டைத் தம்பூராவுக்கிணைய உருமவும், ஊளையிடவும் தொடங்குமாம். தம்மிடம் பயிற்சி பெற்ற ஞமலிகூட இப்படி ச்ருதி சுத்தத்துக்கு முக்கியத்துவம் தரும்போது...! இப்படி கான் சாஹேப் நினைத்தார் என்றால் கர்நாடக இசை வல்லுநர்களின் ரத்தம் கொதிக்காதா?

கான் ஸாஹேபின் இறுமாப்பைத் தலை சாய்க்க எண்ணம் கொண்டார் ஸ்ரீ நாயனாப் பிள்ளை. வயலின் மகா வித்வான் மலைக்கோட்டை ஸ்ரீகோவிந்தஸ்வாமிப் பிள்ளை, ஜலதரங்கம் ஸ்ரீ ரமணைய செட்டியார் ஆகியோருடனும், இவர்களை விட முக்கியமாகப் பச்சிளம் பாலகி பிருந்தாவுடனும் கான் ஸாஹேபின் திருவல்லிக்கேணி இருக்கைக்குச் சென்றார். கான் ஸாஹேப் அமிருதமாகப் பாடினார். விஷமாகப் பேசினார். தம் ஸங்கீதத்தை ஸ்வரப்படுத்திக் காட்ட அவர்களில் எவருக்கேனும் திறன் உண்டா என்று சவால் விடுத்தார். கோவிந்தஸ்வாமிப் பிள்ளை கோப மிகுதியில் பேச்சிழந்து விட்டார். நாயனாப் பிள்ளை கலங்காமலும், கம்பீரத்துடனும், ''உங்கள் சவாலுக்கு எங்கள் வரையில் போக வேண்டியதில்லை; இந்தக் குழந்தையே ஜவாப்

சொல்லுவான். காட்டுங்கள் உங்கள் கை வரிசையை'' என்று பிருந்தாவைக் குறிப்பிட்டுக் கான் ஸாஹேபிடம் கூறினார்.

சிங்கத்துக்குப் பதிலடி தர முயல் குட்டியா வருகிறது? ஏளனமாகக் 'கர்ஜிக்க' ஆரம்பித்தார் கான் ஸாஹேப். முயலால் முயல முடியுமா?

என்ன ஆச்சரியம்! குழந்தை அதை அநாயாசமாக ஸ்வரப்படுத்திக் காட்டினாள்! அந்தப் புத்தி சாதுரியம் ஒரு பக்கம் இருக்கட்டும்; குரலின் மாதுரியம் — தம்புராவை ஒப்பிட்டு இதன் சுருதி சுத்தத்தை நிர்ணயிக்கலாம் என்பதின்றி, இக் குரலுடன் சரிபார்த்தே தம்புராவைச் சுருதி கூட்டலாம் என்னும்படியான அபார உச்ச இழைவு — கான் ஸாஹேபை வியக்க வைத்தது. குழந்தை ஆயிற்றே என்று பாராமல் அவர் கீழும் மேலுமாகக் கோத்து வாங்கி நெருடலான சஞ்சாரங்கள் செய்ய, பிருந்தாவும் அலுக்காமல் சளைக்காமல் ஸ்வரப்படுத்தினாள். கான் ஸாஹேபே அவளுக்கு 'ஸபாஷ்' கொடுக்க வேண்டியதாயிற்று.

தனம்மாள் வழியையும் நாயனாப் பிள்ளை வழியையும் கங்கை, யமுனை என்றோம். நாயனாப் பிள்ளையின் யமுனா பத்ததியில் பிரம்மபுத்ராவின் ஆவேச ஆர்ப்பும் உண்டு. அது கங்கையின் மதுர காம்பீரியத்துக்கு ஒவ்வாததுதான் — ஸங்கீத பாஷையில் சொல்வதானால் அது தனத்தின் குலதனத்துக்கு 'அன்ய ஸ்வரம்' மட்டுமின்றி 'விவாதி ஸ்வரமும்' ஆகும். லய விவாதம் தூக்கலாகத் தெரிவதே வீணை வழியான தனத்தின் இசைக்கு இசையாதது. லயம் என்பது தனியே தெரியாமல், இசையில் லயித்துக் கரையும் 'ஸ்திர ஸங்கீதம்' அது. பிருந்தா முக்தா சிக்ஷை முடிந்து விதுஷிகளாக மேடைகளில் மலரத் தொடங்குகையில் அவர்களுக்கு மகத்தான பிரச்னையே ஏற்பட்டுவிட்டது. சௌக்கியம் நிரம்பிய பாரம்பரிய ஸங்கீதமா? வித்வத் விசேஷமாக உள்ள ஆசிரியர் ஸங்கீதமா? ஸ்ரீமதிகள் பிருந்தாவும் முக்தாவும் பரமாற்புதமாகப் பிரச்னையைச் சமாளித்தனர். 'வித்வத்' என்று துண்டாகத் தெரிகிற தங்கள் சதுரத்தை எல்லாம் தியாகம் செய்து, தனம்மாளின் வழிக்கே தங்களை அர்ப்பித்துக் கொண்டனர். குருத் துரோகம் கூடாது என்பதால் 'புத்தி ராது', 'மொர பெட்டிதே' போன்ற கீர்த்தனங்களும், திருப்புகழ்களும் நிறையப் பாடுவார்கள். ஆனாலும் தாளக் கஸரத்துக்களிலும், ஸ்வர விந்நியாசங்களிலும் நீளப் புகாமல், சௌக்கிய ஸங்கீதத்தையே காத்தனர்.

வெகுவாகத் திறம் பெற்ற ஒன்றினை இப்படித் துறப்பது எளிதல்ல. மிக உன்னதமான கலா நெறியால்தான் அது சாத்தியம். அத்வைத ஆசாரியர்கள் வேதாந்த சாஸ்திரங்களை யெல்லாம் கரைத்துக் குடித்துவிட்டு, பிறகு அவற்றை யெல்லாம் மறந்து, ஞான அநுபவத்தில் நிற்க வேண்டும்; பிறகு மறப்பதற்காகவே முதலில் கற்க வேண்டும் என்பார்கள். இவ்வாறே இந்த உத்திகள் தம் இசைக்கு விசேஷமாக உதவாது, நாதக் குழைவும் துளும்பலும் கொண்ட தமது சாரீர நயத்துக்குப் பொருந்தாது என்று புரிந்து கொண்டு, தற்போது 'பிருந்தா முக்தா பாணி' என்றே பெயர் பெற்றுவிட்ட விச்ராந்தி பத்ததியையே பலப்பல ஆண்டுகளாகப் பின்பற்றி வருகிறார்

இந்தப் பல்லாண்டுகளில் எத்தனை நூதனப் புயல்கள் வீசியிருக்கின்றன? எதிலும் அசையாத ஆல விருட்சமாக நிற்கிறது ஸ்ரீமதி பிருந்தாவின் ஸங்கீதம். கோயில் பூஜைக் கிரமத்தைக்கூட டெலிவிஷன் நிகழ்ச்சிக்கேற்ப அமைத்துக் கொள்கிற இந்நாளிலும், 'ஆர்ட்டிஃபிஷியல்' கட்டுப்பாடு இல்லாத 'ஆர்ட்'டாக இருந்து, கலைக்குத் தங்களை அர்ப்பணித்துக் கொள்ளும் பக்தரின் நிலையில் உள்ள ரஸிகர்களுக்கு ரஸமயமாக இனிக்கிறது. ஸ்வர ஸ்தானங்களில் மெல்லினை வல்லினங்களும், ஒதுக்கல் செதுக்கலும், இழைவும் குழைவும் எப்படி யெப்படி இயற்கையாக இருக்க வேண்டுமோ அப்படி இருப்பதே பிருந்தாவின் இசை. இயற்கையை ஒட்டி அதது உள்ளபடி, க்ஷேத்ரக்ஞர் பதத்தை மத்த யானையின் மந்த கதியிலும், தர்மபுரி ஜாவளியைக் கலைமானின் துள்ளலிலும் கொடுப்பார் பிருந்தா. உள்ளபடி தருகிறாரே யன்றி இவராக ஒப்பனை செய்து தராததால் தான் சிலர் தவறுதலாக பிருந்தாவுக்கு கயக் கற்பனை போதாது என்கிறார்கள். அவரது ராக ஆலாபனையை மனங் கொடுத்துக் கேட்டவர்கள் ஒப்ப முடியாத கூற்று.

'பிருந்தா' என்பது 'துளஸி'க்கு இன்னொரு பெயர். துளஸியின் 'கரீல்' மணத்தை, பிருந்தா அப்பழுக்கில்லாமல் மேல் ஷட்ஜத்தைத் தொடும்போது ஸஹ்ருதயர்கள் உணர்வார்கள்.

ஸ்ரீமதி முக்தாவுக்குப் பதிலாக தமது புதல்வி ஸ்ரீமதி வேதவல்லியுடன் ஸ்ரீமதி பிருந்தா பாடத் தொடங்கியபோது சிலர், வேதா அன்னையையும் 'வேக' வழிக்குக் கொஞ்சம் திருப்புகிறாரோ என்று விசனித்ததுண்டு. ஆனால் தற்போது அப்படி இல்லை, மகளும் அன்னையின் பாணியில்தான் மெருகேறி வருகிறார் என்ற நிம்மதி பிறந்திருக்கிறது.

தமிழ் நாடு அரசு இசைக் கல்லூரியில் பல்லாண்டுகள் பேராசிரியர் பதவி வகித்த பிருந்தாவிடம், இது தவிர, இன்றைய முதுபெரும் வித்வான்கள் உள்படக் கலைஞர் பலர் கிருதிகளும் பதங்களும் பாடம் செய்துள்ளனர். 19[illegible]ல் அமெரிக்கா சென்று ஸியாட்டிலில் வீணை ஆசிரியைப் பதவி வகித்தார். ஆம், வீணைதான்! வீணை தனத்தின் பேத்தி தான் என்றாலும், அந்த மகளிரை ஆண்ட வாத்தியத்தைத் தொடவே அவரது மக்கள் அஞ்சினர். துணிச்சலுக்குப் பெயர் போன பிருந்தாவோ, தானாகவே (ஸ்வயம் ஆசார்ய புருஷியாக) வீணையை எடுத்துப் பயில ஆரம்பித்தது மட்டுமின்றி, இள வயதில் ஒரு நாள் பாட்டியின் முன்பே அதை மீட்டிப் பாராட்டும் பெற்றிருந்தார்.

ஸ்ரீமதி பிருந்தா அவர்கள் இசைக்குச் செய்துள்ள பெரிய தொண்டு முப்பது அழகிய ஜாவளிகளை ஸ்வர-ஸாஹித்யமாக நூலுருவில் வெளியிடப்பட்டிருப்பதாகும். (மியூஸிக் அகாடெமி வெளியீடு.)

ஸங்கீத நாடக அகாதெமிப் பரிசும், இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் விருதும் பெற்றுள்ள இம்மாபெரும் இசைக் கலைஞரை இவ்வருடம் மியூஸிக் அகாடெமியின் ஸங்கீத கலாநிதிப் பட்டம் சென்று அடைகிறது. பிருந்தாவை ஸங்கீதகலாநிதி என்பது தங்கத்துக்குப் பொன் என்று பட்டம் சூட்டுவதுதானே? —'**கன்யா**'

மேலட்டை வண்ணப்படம்: **உத்ரா**

# பார்த்திபன் கனவு

அமரர் கல்கி

அத்தியாயம் 21

## வள்ளியின் சாபம்

பொன்னனுடையகுற்றச்சாட்டைக் கேட்ட போது, மாரப்பன் திடீரென்று ஆயிரம் தேள் கொட்டியவனைப் போல் துடிதுடித்தான். பொன்னனைப் பார்வையினாலேயே எரித்து விடுகிறவனைப்போல ஒரு கண நேரம் கொடூரமாய்ப் பார்த்தான். பின்னர், திரும்பித் தலையைக் குனிந்து கொண்டு நின்றான்.

''பூபதி! இதற்கு என்ன சொல்கிறாய்?'' என்று சக்கரவர்த்தியின் இடிக் குரலில் கேட்கவும், மாரப்பனுக்கு மறுபடியும் தூக்கிவாரிப் போட்டது. ஆத்திரத்தினாலும், கோபத்தினாலும் அவனுக்கு அழுகை வந்துவிட்டது.

''பிரபோ! இவன் சொல்வது பொய், பொய், பொய். இளவரசனை நான் தூண்டி விடவில்லை. இவர்களுடைய சதியாலோசனையைப் பற்றி நன்றாய்த் தெரிந்து கொள்வதற்காகச் சிறிது காலம் இவர்களுக்கு உதவியாக இருப்பது போல் நடித்தேன்! அவ்வளவுதான். உடனுக்குடனே, தங்களுடைய தளபதி அச்சுதவர்ம பல்லவரிடம் எல்லா விவரங்களையும் சொல்லிக் கொண்டிருந்தேன்.....''

அப்போது, ''பாவி! துரோகி!'' என்று மெல்லிய பெண் குரல் கேட்டது.

சக்கரவர்த்தி, ''யார் அது?'' என்று அதட்டிவிட்டுச் சுற்று முற்றும் பார்த்தார். அந்தக் குரல் வள்ளி நின்ற திசையிலிருந்துதான் வந்தது. ஆனாலும் சக்கரவர்த்தி அந்தப் பக்கம் பார்த்த போது வள்ளி பரம சாதுவைப் போல் நின்றாள்.

மாரப்பன் சிறிது தைரியமடைந்து, ''பிரபோ! விக்கிரமனை இந்த அடிமை தூண்டிவிடவே யில்லை; இது சத்தியம். அவனைத் தூண்டிவிட்டது யார் என்றும் எனக்குத் தெரியும். சத்தியமாய்த் தெரியும்! சமூகத்தில் கட்டளை பிறந்தால் சொல்லுகிறேன்'' என்றான்.

''சொல்லு; தைரியமாய்ச்சொல்லு!'' என்றார் சக்கரவர்த்தி.

''ஜடாமகுடதாரியான ஒரு சிவனடியார் அருள்மொழி ராணியையும் விக்கிரமனையும் அடிக்கடி வந்து பார்த்துக் கொண்டிருந்தார். அவர் உண்மையில் சிவனடியார் இல்லை; கபட சந்நியாசி; அவர்தான் விக்கிரமனை இந்தப் பயங்கரமான காரியத்தில் தூண்டிவிட்டவர்.''

இதுவரை மௌனமாய் இந்த நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்த குந்தவி இப்போது குறுக்கிட்டு, ''உமக்கு எப்படித் தெரியும்? அந்தக் கபட சந்நியாசியை நீர் பார்த்திருக்கிறீரா?'' என்று கேட்டாள்.

''ஆமாம், தேவி! இந்தக் கண்களாலேயே பார்த்திருக்கிறேன். இதோ சாது போல் நிற்கிறானே, இந்த ஓடக்காரனுடைய குடிசையில்தான் அவர்கள் அடிக்கடி சந்தித்துச் சதியாலோசனை செய்து வந்தார்கள். அந்தக் கபட சந்நியாசியின் சடையைப் பிடித்துக் குலுக்கி அவனை இன்னானென்று வெளிப்படுத்த நான் பிரயத்தனம் செய்தேன். இந்தப் பொன்னனும் வள்ளியும்தான் அதைக் கெடுத்தார்கள்.''

''என் பேச்சை எடுத்தால் நாக்கை அறுத்து விடுவேன்!'' என்று வள்ளி மெல்லிய குரலில் முணுமுணுத்தாள்.

சக்கரவர்த்தி அவளைப் பார்த்துப் புன்னகையுடன், ''பெண்ணே! அடிக்கடி உன் உதடுகள் அசைகின்றன! ஆனால் வார்த்தை எதுவும் வெளியில் வரக் காணோம்! உனக்கு ஏதாவது சொல்ல வேணுமானால் பயப்படாமல் சொல்லு!'' என்றார்.

உடனே வள்ளி சக்கரவர்த்தியைப் பார்த்துக் கும்பிட்டுக் கொண்டு, ''பிரபோ! இவர் சொல்வதெல்லாம் பொய். சிவனடியார் இளவரசரைத் தூண்டி விட்டார் என்பது பெரும் பொய். சாமியார் பெரிய மகான். அவர் அடிக்கடி வந்து ஆறுதல் சொல்லிக்கொண்டிருந்தபடியால்தான் எங்கள் மகாராணி இன்னும் உயிரோடு இருக்கிறார். அவர் இளவரசரை, 'இந்தக் காரியம் வேண்டாம், வேண்டாம்' என்றுதான் சொல்லிக் கொண்டிருந்தார். இளவரசருடைய மனத்தை

மாற்ற முடியவில்லை. சாமியார் மேல் பொய்யாகக் குற்றம் சுமத்துகிறவர்கள் பாவிகள், சண்டாளர்கள்; அவர்கள் நரகத்துக்குத்தான் போவார்கள்.....'' என்றாள்.

''நிறுத்து, பெண்ணே! போதும் சாபம் கொடுத்தது!'' என்று சக்கரவர்த்தி சொல்லி, குந்தவியை நோக்கிப் புன்னகையுடன், ''பார்த்தாயா அம்மா!'' என்றார்.

''பார்த்தேன்; அந்தச் சாமியாரின் மந்திரத்தில் இந்தப் பெண்ணும் நன்றாய் மயங்கிப் போயிருக்கிறாள்! இவர்களில் ஒருவராவது முழுவதும் உண்மை சொல்வதாக எனக்குத் தோன்றவில்லை, அப்பா! ஒவ்வொருவரும் மனத்தில் ஒரு நோக்கத்தை வைத்துக் கொண்டு பேசுகிறார்கள்'' என்றாள் குந்தவி.

அப்போது சக்கரவர்த்தி மாரப்ப பூபதியைப் பார்த்து, ''பூபதி! உன் மேல் ஏற்பட்ட சந்தேகம் தீரவில்லை. போனால் போகிறதென்று இந்தத் தடவை மன்னித்து விடுகிறேன். சேனாபதி பதவிக்கு நீ இப்பொழுது ஆசைப்படுவது வீண். அந்தப் பதவிக்கு உன்னுடைய தகுதியை இனி மேல்தான் நீ நிரூபிக்க வேண்டும். அது வரையில் உன் பேரில் வேறு குற்றம் ஏற்படாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும். தெரியுமா? இப்போது நீ போகலாம்!'' என்று மிகக் கடுமையான குரலில் கூறினார். மாரப்ப பூபதி சப்த நாடியும் ஒடுங்கியவனாய் வெளியேறினான்.

அந்தச் சமயத்தில் ஒரு சேவகன் உள்ளே வந்து சக்கரவர்த்திக்கு அடி பணிந்து ஓர் ஓலையை நீட்டினான். சக்கரவர்த்தி அதை வாங்கிப் பார்த்ததும், ''ஓடக்காரா! நீயும் உன் மனைவியும் இப்போது போகலாம். பிறகு உங்களைக் கவனிக்கிறேன். உன் மனைவியை அந்தச் சிவனடியார் விஷயத்தில் மட்டும் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்கச் சொல்லு. அவருடைய மந்திரத்தில் அவள் ரொம்பவும் மயங்கியிருக்கிறாள் போல் தோன்றுகிறது!'' என்றார்.

அப்போது வள்ளியின் முகத்திலே நாணத்தின் அறிகுறி தோன்றியது. திடீரென்று அது புன்னகையாக மாறியது. தலை குனிந்த வண்ணம் சக்கரவர்த்தியைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டே அவள் பொன்னனைத் தொடர்ந்து வெளியே சென்றாள்.



சக்கரவர்த்தி அவர்கள் வெளியேறிய திசையைப் பார்த்தவண்ணம், ''நானும் எத்தனையோ 'பெண்களைப் பார்த்திருக்கிறேன். இந்த வள்ளியைப் போல்....'' என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தார்.

''அது இருக்கட்டும், அப்பா! ஏதோ ஒலி வந்ததே? அது என்ன?'' என்று குந்தவி கேட்டாள்.

''போலிச் சிவனடியாரைப் பற்றி இத்தனை நேரம் பேசிக் கொண்டிருந்தோமல்லவா ? உண்மையான சிவனடியார் இப்போது வருகிறார். நகருக்கு வெளியே சென்று அவரை நாம் எதிர்கொண்டு அழைத்து வர வேண்டும்'' என்றார் சக்கரவர்த்தி.

'' அவர் யார், அப்படிப்பட்ட உண்மையான சிவனடியார்? அப்பா ! ஒரு வேளை நமது அப்பர் பெருமானோ ? அவரைப் பற்றிக் கொஞ்சம் அபசாரமாக நினைத்தேன். அடிகளை மறுபடியும் தரிசித்து அவரிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்'' என்றாள் குந்தவி.

''குழந்தையாகிய நீ அபசாரமாக நினைத்ததனால், அவருக்கு என்ன குறைவு நேர்ந்துவிடப் போகிறது? எப்போதும் சிவானந்தத்திலே திளைத்திருக்கும் மகான் அவர். கொஞ்சங்கூட அதைப் பற்றி உனக்குக் கவலை வேண்டாம். குழந்தாய் ! இப்போது வரப் போகிறவர் அப்பர் பெருமான் அல்ல; பரஞ்சோதி அடிகள்!''

''யார்? உங்களுடைய பழைய சேனாதிபதியா? உங்களுடன் வாதாபிக்கு வந்து புலிகேசியை வெல்ல உதவி புரிந்தவரா?''

''அவர் உதவி புரியவில்லை, குந்தவி, அவர்தான் புலிகேசியை வென்றவர்; புற்றிலிருந்து ஈசல் கிளம்புவது போல் கிளம்பிய சளுக்கர் படைகளைத் துவம்சம் செய்தவர். அந்த மகா வீரர்தான் இப்போது அரையில் உடுத்த துணியுடன், விபூதி ருத்திராட்சதாரியாய் ஸ்தல யாத்திரை செய்து கொண்டு வருகிறார். தமது பெயரைக்கூட அவர் மாற்றிக் கொண்டுவிட்டார். 'சிறுத்



தொண்டர்' என்று தம்மைச் சொல்லிக் கொள்கிறார்.''

''அவர் ஏன் சேனுதிபதி பதவியை விட்டார்? அவருக்கு ரொம்ப வயதாகிவிட்டதா?'' என்று குந்தவி கேட்டாள்.

''இல்லை; அவருக்கு அப்படி ஒன்றும் வயசாகவில்லை. அவர் சேனுதிபதி பதவியை விட்ட காரணத்தை இன்னொரு சமயம் சொல்லுகிறேன். இப்போது அவர் வரும் நேரம் ஆகிவிட்டது'' என்றார் சக்கரவர்த்தி.

பிறகு, ''குந்தவி! பரஞ்சோதியுடன்கூட அவருடைய தர்மபத்தினியும் யாத்திரை செய்து வருகிறார். அவர்களை எதிர்கொண்டு அழைத்து வரலாம்; நீயும் வருகிறாயா?'' என்று கேட்டார்.

''அவசியம் வருகிறேன், அப்பா!... அவர்களைப் பார்க்க வேண்டும் என்று எனக்கு எத்தனையோ நாளாக ஆசை!'' என்றாள் குந்தவி.

## அத்தியாயம் 22

# சிறுத்தொண்டர்

உறையூருக்கு மேற்கே காவேரி நதியிலிருந்து சற்றுத் தூரத்தில் ஓர் அழகான தாமரைக் குளம் இருந்தது. அந்தி நேரமானபடியால், அத்தடாகத்தை அழகு செய்த தாமரை மலர்கள் எல்லாம் அச்சமயம் இதழ் கூம்பியிருந்தன. மேல் வானத்தைப் பொன்மயமாகச் செய்து கொண்டிருந்த சூரியன், சுழலுகின்ற தங்கத் தகட்டைப் போல், அதி விரைவாய்க் கீழே இறங்கிக்கொண்டிருந்தான்.

தாமரைக் குளத்தைச் சேர்ந்த படித்துறை மண்டபத்தில் சக்கரவர்த்தியும் அவருடைய செல்வப் புதல்வியும் வந்து தங்கியிருந்தார்கள். மண்டபத்துக்குச் சற்றுப் பின்னால் வேல் பிடித்த வீரர்கள் ஒதுங்கி நின்றார்கள். பட்டத்து யானையும், புரவிகளும் சிறிது தூரத்தில் காணப்பட்டன.

மேற்குத் திக்கிலிருந்து காவேரி ஆற்றின் ஓரமாக வந்த சாலையைச் சக்கரவர்த்தி ஆவலுடன் உற்று நோக்கிக் கொண்டிருந்தார்.

குந்தவி தடாகத்தின் படிக்கட்டில் இறங்கிக் கீழ்ப் படியில் வந்து நின்றாள். தளதளவென்று விளங்கிய தாமரை இலைகளின் வனப்பையும், கூம்பிய தாமரை மலர்கள், மொட்டுகள் இவற்றின் அழகையும் அவள் சிறிது நேரம் பார்த்து மகிழ்ந்தாள். தாமரை இலைகளின் மேலே முத்து முத்தாகத் தண்ணீர்த் துளிகள் நின்றதையும் இளங்காற்றில் தாமரை இலைகள் அசைந்த போது அந்த முத்துக்கள் அங்குமிங்கும் ஓடிச் சில சமயம் ஒன்றோடொன்று கலந்தும், சில சமயம் பிரிந்தும் விளையாடியதையும் பார்த்துக் களித்தாள். அப்போது தடாகத்தின் தெளிந்த நீரில் பிரதிபலித்த அவளுடைய உருவமானது தற்செயலாக அவள் பார்வையைக் கவர்ந்தது.

சந்தன நிற தந்தத்தினால் செய்தவை போல் விளங்கிய குந்தவியின் அழகிய நீண்ட புஜங்களும் பங்கஜ மலர்ப் பாதங்களும் பளிங்கு போல் தெளிந்த தண்ணீரிலே பிரதிபலித்த போது பன்மடங்கு வனப்பும் சோபையும் பெற்றுவிளங்கின.

குந்தவி தன்னுடைய பிரதிபிம்பத்தைத் தானே பார்த்தவண்ணமாகச் சற்று நேரம் ஸ்தம்பித்து நின்றாள்.

அந்தக் காட்சி, கை தேர்ந்த சிற்பி ஒருவன் செய்த அற்புத அழகு வாய்ந்த பதுமை ஒன்றை உயர்ந்த ஆடை ஆபரணங்களினால் அலங்கரித்து அக்குளக்கரையில் நிறுத்தி வைத்திருப்பது போல் தோன்றியது.

திடீரென்று தந்தப் பதுமைக்கு உயிர் வந்தது போல் குந்தவி ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள். அவளுடைய மேனி அழகைப் பற்றி அவளிடம் ஏற்கனவே பலர் பிரஸ்தாபித்ததுண்டு. தாய்மார்கள் சொல்லியிருக்கிறார்கள்; தோழிகள் அடிக்கடி கூறியிருக்கிறார்கள்; சித்திரக்காரர்களும் சிற்பிகளும் வியந்து பாராட்டியிருக்கிறார்கள். அப்போது எல்லாம் குந்தவி மேற்படி பாராட்டுதல்களைப் பொருட்படுத்தியதே இல்லை. ஆனால், இப்போது அவள் தன் மேனி அழகைப் பற்றித் தானே சிந்திக்கத் தொடங்கினாள். தோழிகள் அழகைப் பற்றிச் சொல்வதெல்லாம் வெறும் புகழ்ச்சியல்ல; விளையாட்டும் அல்ல; உண்மைதான். ஆனால் ஆனால்? 'இந்த அழகினாலே என்ன பிரயோஜனம்?' என்று அவளுடைய உள்ளத்தில் ஒரு கேள்வி எழுந்தது. அடுத்தாற்போல், 'ஆகா! அந்த இராஜகுமாரனுக்கு இந்த உறையூர்தானே? அவன் மட்டும் இப்போது என் அருகில் நின்று கொண்டிருந்தால்?...' என்னும் எண்ணம் உண்டாயிற்று. இதை

# இதோ! நீங்கள் துடிதுடிப்புடனும், ஊக்கத்துடனும் விளங்க சக்தியளிக்கும் 'எரிபொருள்'




# பூஸ்ட்

## மால்ட் சாக்லெட் மில்க் ட்ரிங்க்

ரயிலுக்கு எரிபொருள் தேவைப்படுவது போன்றே, உங்களுக்கும் நீங்கள் ஒவ்வொரு தினத்தையும் சுறுசுறுப்புடன் தொடங்கவும், நாள் முழுவதும், சீராக நல்ல வேகத்துடன் செயலாற்றவும், ஒரு சக்தியளிக்கும் 'எரிபொருள்' தேவை. இதற்கு, நீங்கள் தினமும் காலையில் பூஸ்ட் பருக வேண்டியது அவசியம். முக்கியமாக பள்ளி வேலையிலும், விளையாட்டிலும் அதிக சக்தியை செலவழிக்கும் உங்கள் குழந்தைகளுக்கு பூஸ்ட் அவசியம் அளியுங்கள்.

பூஸ்ட் ஒரு புதிய, மால்ட், சாக்லெட், பால் சேர்ந்துள்ள பானம்.

உடலுக்குத் தேவையான போஷாக்கினைப் பற்றி அனைத்தையும் அறிந்துள்ள 'ஹார்லிக்ஸ்' தயாரிப்பாளர்கள் அளிப்பது.

பூஸ்ட், முழு ஆடைப்பால், கோதுமை, பார்லி மால்ட், கோகோ மற்றும் இயற்கையான வைட்டமின்கள், கனிஜச் சத்துக்கள் முதலியவற்றிலிருந்து தயாரிக்கப்படுகிறது.

மற்ற எந்த சாக்லெட் பானத்தையும்விட பூஸ்ட்டில் அதிக அளவு பால் சேர்க்கப்பட்டுள்ளது. பூஸ்ட்டில் உள்ள அதிக அளவு பால், உங்கள் குழந்தைகளுக்கு அதிக போஷாக்கினையும், அதிக அளவு புரதச்சத்துக்களையும் அளித்து, அவர்கள் வளர்ச்சிக்கு உதவுகிறது. பூஸ்ட்டில் உள்ள அதிக அளவு பாலினை, பூஸ்ட் பானத்தை அருந்தும் போது நீங்களே உணரலாம்.

பூஸ்ட்டின் மால்ட், சாக்லெட் கலந்த நிஜச்சுவையை உங்கள் குடும்பத்தினர் அனைவரும் விரும்புவர்.

பூஸ்ட், உங்களுடைய ஒவ்வொரு தினத்தையும் துடிதுடிப்பான முறையில் தொடங்குவதற்கு ஒரு அருமையான பானம்.

## 'ஹார்லிக்ஸ்' தயாரிப்பாளர்கள் அளிப்பது

B-4212 Tam. A

# போர்ட்லாண்ட் போஸ்ஸோலானா சிமேண்டு

## மிகச் சிறந்ததற்கு நிகர்

ஏஸிஸியின் போர்ட்லாண்ட் பொஸ்ஸோலானா சிமெண்டு சாதாரண போர்ட்லாண்ட் சிமெண்டின் எல்லா இயல்புகளும் கொண்டிருப்பதோடு சில சிறப்புத் தகுதிகளும் உடைய அசல் உயர் ரக சிமெண்டாகும். ஆகவே, அதை சாதாரண போர்ட்லாண்ட் சிமெண்டை உபயோகிக்கும் எல்லா வேலைகளுக்கும் உபயோகிக்கலாம்.

இதன் காவிவண்ணச்சாயல், உற்பத்தியில் இதனோடு சேருகின்ற பொஸ்ஸோலானாவினால் உண்டாகும் அவ்வண்ணம் திண்ணமாகக் குறையாகாது. பொஸ்ஸோலானா சிமெண்டு குடியிருப்புக கட்டடங்கள், தொழிற்சாலைகள், ரீ-இன்ஃபோர்ஸ்டு காங்க்ரீட் கட்டுமானங்கள் ஆகியவற்றிற்குப் பயன்படும் மிகச்சிறந்த பொதுநோக்க சிமெண்டாகும். அணைகள், பாலம் தாங்கிகள், நீர்தடுப்புச் சுவர்கள் போன்ற பெரிய கான்க்ரீட் வேலைகளுக்கு தனிப் பொருத்தமுள்ள சிமெண்ட் இது.

போர்ட்லாண்ட் பொஸ்ஸோலானா சிமெண்டுக்கான இந்தியத்தர நிர்ணய விதிமுறைகளின் குறைந்தபட்சத் தேவைகளை மிஞ்சியுள்ளது ஏஸிஸி போர்ட்லாண்டு பொஸ்ஸோலானா சிமெண்டு; சாதாரண சிமெண்டை விட நீர்புகாத்தன்மை அதிகம், அதோடு பயன்படுதிறனிலே மேம்பட்டது. எனவே பிளாஸ்டர் வேலைகள் மற்றும் மேற்பரப்பிடுதல் ஆகியவற்றை விரைவாகவும் எளிதாகவும் செய்ய உதவுகிறது.

**தட்டாமல் நாடுவீர் பொஸ்ஸோலானா சிமெண்டு. தயாரிப்போர் ஏஸிஸி என்றால் தரத்திற்கு அதுவே உறுதி**

**தி அஸோஸியேடெட் சிமெண்டு கம்பெனீஸ் லிமிடெட்**

**ஏஸிஸி**

உயர்தர சிமெண்டுக்
காக உங்களுக்கு
உத்தரவாதம்

ACC.1297

அடுத்து இன்னதென்று விவரிக்க முடியாத மனக்கிலேசம் ஏற்பட்டது.

'இந்த அலங்காரம் எல்லாம் என்னத்துக்காக? நானே முதல் ஆபரணம் ஒன்றும் அணிந்து கொள்ளக் கூடாது. இவற்றினால் என்ன பிரயோஜனம்? அழகு அதிகமாகி விடுகிறதா? இருக்கிற அழகு போதுமே!' என்றெல்லாம் சிந்தனைகள் தோன்றின. ''இப்போதே இதை யெல்லாம் எடுத்து எறிந்துவிடுகிறேனே!'' என்று தலையில் சூடியிருந்த ஆபரணங்களை முதலில் எடுக்கப் போனாள்.

அப்போது திடீரென்று அவளுடைய தந்தையின் குரல், ''குந்தவி! இங்கே ஓடி வா!'' என்று விரைந்து அழைத்தது காதில் விழுந்தது. தன்னை மறந்த சிந்தனையில் ஆழ்ந்திருந்த குந்தவி, திடுக்கிட்டுத் தந்தை இருந்த பக்கம் நோக்கினாள்.

''அதோ பார், குந்தவி! சிவிகை வருகிறது! என் அருமைச் சிநேகிதர் வருகிறார்! பல்லவ சேனாதிபதி வருகிறார்! சளுக்கரை முறியடித்துப் புலிகேசியைக் கொன்ற மாவீரர் வருகிறார்! உறையூருக்கு நாம் இந்தச் சமயம் வந்தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று....!''

இவ்விதம், ஊரிலிருந்து உறவினர் வரக் காணும் சின்னஞ் சிறு குழந்தைகளைப் போல் சக்கரவர்த்தி அளவற்ற உற்சாகத்துடன் சொல்லிக் கொண்டே போனார். அவர் அவ்வளவு குதூகலம் கொண்டதைக் குந்தவி அதற்கு முன்னால் கண்டதேயில்லை

சிறிது நேரத்துக்கெல்லாம் சிவிகை தாமரைத் தடாகத்தின் அருகில் வந்துவிட்டது. மண்டபத்தில் சக்கரவர்த்தி நிற்பதைக் கண்டதும் ஏவலாளர் சிவிகையை விரைந்து கீழே இறக்கினார்கள். அந்தச் சிவிகையிலிருந்து, தலையையும் முகத்தையும் நன்கு முண்டனம் செய்தவரும், விபூதி ருத்திராட்சதாரியுமான பெரியவர் ஒருவர் இறங்கினார். அவருடன் ஒரு மூதாட்டியும் இறங்கினார்.

A
3
1
A
2

**புதிர் விடை**

படத்தில் உள்ளபடி A என்ற கோடிட்ட பகுதியை வெட்டி, கீழே உள்ள 1, 2 பகுதிகளுக்கு மேல் தலைகீழாக மாற்றி வைத்துவிட்டால் 1, 2 மற்றும் 3 ஆகிய பகுதிகள் சரிசமபாகங்களாக இருக்கும்.

அந்தப் பெரியவர், ''அரசே!'' என்று சொல்லிக் கொண்டு மண்டபத்தை நோக்கி விரைந்து வந்தார். சக்கரவர்த்தியும், ''சேனாதிபதி!'' என்று சொல்லிக் கொண்டு, மண்டபத்திலிருந்து விரைவாகக் கீழே இறங்கி வந்தார்.

சற்று நேரம் ஒருவரையொருவர் பார்த்தவண்ணமாகக் கூப்பிய கரத்துடன் நின்றார்கள். இருவருடைய கண்களிலும் நீர் ததும்பியது. பிறகு, ஏககாலத்தில் இருவரும் ஒருவரையொருவர் நெருங்கி வந்து ஆலிங்கனம் செய்து கொண்டார்கள். அப்போது இருவருடைய கண்களிலிருந்தும் கண்ணீர் பெருகி வழிந்து அருவியாக ஓடத் தொடங்கியது.

இதற்கிடையில், சிவிகையிலிருந்து இறங்கிய மூதாட்டியை நோக்கிக் குந்தவி வந்தாள். அவருக்குக் குந்தவி நமஸ்காரம் செய்ய யத்தனிக்க, அந்த அம்மையார் அதற்கு இடம் கொடாமல் அவளைத் தம்முடன் சேர்த்து அணைத்துக் கொண்டு, ''குழந்தாய்! பிறைசூடும் பெருமானுடைய அருளால் உனக்கு எல்லா மங்களமும் உண்டாகட்டும்....

---

காப்பி கேட்டீங்களே ஹாட் காப்பியா? ...
ஸ்ட்ராங் காப்பியா?
ஒயட் காப்பி

உன் மனத்துக்கிசைந்த மணவாளனை அடைந்து தீர்க்கசுமங்கலியாக வாழ்வாய்!'' என்று ஆசீர்வதித்தார். அவர் இவ்விதம் ஆசி கூறிய போது குந்தவியின் தேகத்தில் புளகாங்கிதம் உண்டாயிற்று.

பரஸ்பரம் . ஆலிங்கனம் செய்து கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்த சக்கரவர்த்தியும், அவருடைய பழைய சேனாபதியும் சிறிது நேரத்துக்கெல்லாம் சற்று விலகி ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

''உறையூருக்கு நான் இச்சமயம் வந்தது எவ்வளவு அதிர்ஷ்டம்! இல்லாவிட்டால் உங்களைப் பார்த்திருக்க முடியாதல்லவா? நீங்கள்தான் என்னை அடியோடு மறந்து விட்டீர்கள்; காஞ்சிக்கு வருவதேயில்லை!'' என்றார் சக்கரவர்த்தி.

''அரசே! தங்களை நான் மறந்துவிடுவதா? தென்னாட்டில் நான் தரிசித்த ஒவ்வொரு ஸ்தலத்திலும் தங்களுடைய நினைவு எனக்கு உண்டாயிற்று. இந்தத் திவ்விய க்ஷேத்திர யாத்திரையில் தாங்களும் என்கூட இல்லையே என்று எவ்வளவோ வருந்தினேன். கடைசியில் பழனி மலையில் எழுந்தருளி யிருக்கும் ஆண்டவனைத் தரிசித்தபோதும் தங்களுடைய நினைவுதான் எனக்கு. அவருடைய சந்நிதியில் நான் விரும்பியது உடனே நிறைவேறி விட்டது. இங்கே வந்ததும் தங்களைப் பார்த்தேன்...''

''சேனாபதி!...''

''பிரபோ! என்னை அவ்விதம் அழைக்க வேண்டாம்!''

''பரஞ்சோதி!''

''அது என் பூர்வ ஜன்மப் பெயர்; அதை இப்பொழுது கேட்கப் பிடிக்கவில்லை.''

''கேளும், சிவபக்தரே!''

''அவ்வளவு பெருமைக்கு நான் உரியவன் அல்ல பிரபு! இன்று இந்நாட்டில் மகான்களான சிவபக்தர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவர்களுக்குத் தொண்டு புரியும் சிறுத்தொண்டன் நான்!''

''கேளும் சிறுத்தொண்டரே! நான் சொல்ல வந்த விஷயம் என்னவென்றால்...''

''சொல்லுங்கள் அரசே!''

''இந்த உலகத்தில் நான் செய்து முடிக்க வேண்டிய காரியங்கள் இன்னும் இரண்டு பாக்கி இருக்கின்றன... அவற்றை முடித்து விட்டால் நானும் உங்களைப் போல் துறவு பூண்டு ஸ்தல யாத்திரை தொடங்கி விடுவேன். ஆனால் உங்களைப் போல் தலையை முண்டனம் செய்து கொள்ள மாட்டேன். பார்த்தவர்கள் வசிஷ்டரோ, விசுவாமித்திரரோ, அல்லது அகஸ்திய முனிவர் தானோ? — என்று பிரமிக்கும்படி ஜடா மகுடம் தரிப்பேன்!'' என்று சொல்லிச் சக்கரவர்த்தி நகைக்க, சிறுத்தொண்டரும் கூட நகைத்தார்.

அவ்விருவருடைய சிரிப்பின் ஒலியும் அந்தி நேரத்தில் கூட்டை நோக்கிப் பறந்த பறவைகளின் குரல்களுடன் கலந்து நாற்றிசையும் பரவி எதிரொலி செய்தன. (தொடரும்)

---



☐ பிரதிபா ராஜகோபாலனின் 'வேள்வித்தீ குளிர் காய்வதற்கு அல்ல!' என்ற போட்டிக் கதை படித்தேன். மெய்சிலிர்த்தேன்!
பெங்களூர்—21
1—12—76 தே. மாயம்பெருமாள் பி.ஏ.,

☐ ''கணங்களும் யுகங்களும்'' கதையைப் பற்றிச் சகோதரி வசந்தாவின் கருத்துக்கு ஆசிரியரின் பதில் - கல்கி பத்திரிகையின் தரத்தை மேலும் ஒரு படி உயர்த்தி விட்டது. அண்ணல் காந்தியடிகளும் 'ரியல்' தான் என்ற ஆசிரியரின் கருத்தாழம் மிக்க சொல் அட்சர லட்சம் பெறும்.
மோகனூர்
3—12—76 கே. எஸ். பத்மநாபன்

☐ கதையை வசந்தா அவர்கள் ஊன்றிப் படிக்காமல் நுனிப்புல் மேய்ந்திருப்பது விளங்குகிறது. அவர் ஒரு கண நேரம் கதையின் தரத்தை ஆராயாமல் எழுதிய கடிதம் என்னைப் போன்ற பல்லாயிரக்கணக்கான வாசகர்களைப் பல யுகங்களுக்கு வேதனைப்பட வைத்து விட்டது.
திருவண்ணாமலை
3—12—76 லலிதா செல்லப்பா

☐ சகோதரி வசந்தா குறிப்பிட்டது போல் அக்கதை முழுக்க முழுக்க 'ஸ்டுபிட்' தான்.
திண்டுக்கல்,
3—12—76 எஸ்.பெரியதம்பி தியாகராஜன்

# பெரும் பணம் பெற உங்களுக்கு வாய்ப்பு உண்டா?



இதற்கு ஆரூடம் கேட்க வேண்டாம்.

ஐஓபியைக் கேளுங்கள். மாதாமாதம் நீங்கள் சேமிப்பது ரூபாய் ஐந்தானாலும், ஐநூறானாலும் அதைப் பன்மடங்காகப் பெருக்கி நீங்கள் பெரும் பணம் பெறும் வாய்ப்பைத் தருபவை எங்கள் சேமிப்புத் திட்டங்கள். எந்த சந்தர்ப்பத்திற்கும் வசதியாகப் பணம் கிடைக்கும் வகையில் வகுக்கப்பட்டுள்ள ஐஓபியின் திட்டங்கள். அவற்றில் சில:

**மறுமுதலீடு டெபாஸிட் திட்டம்:**

நீங்கள் முதலீடு செய்த தொகை குறிப்பிட்ட காலத்தில் பலமடங்கு பெருகி வளர்கிறது.

**படிப்படியாக உயரும் திருமணச் சேமிப்புத் திட்டம்:**

உங்கள் மகன்/மகள் திருமணத்திற்கு வசதியாகச் சேமிக்க உதவும் சிறப்புத் திட்டம்.

**ரெக்கரிங் டெபாஸிட் திட்டம்:**

சிறு தொகையாக மாதா மாதம் சேமித்து, கெடு முடியும் போது கணிசமான தொகை கிடைக்க வழி செய்யும் பயனுள்ள திட்டம்.

**க்ஷேம நலத் திட்டம்:**

நீங்கள் செலுத்திய பணம் மேலும் அதிகமாக திரும்ப உங்களுக்குக் கிடைக்கிறது. அதே சமயம் உங்கள் சேமிப்பும் அதற்குரிய வட்டியும் குறையாமல் இருக்கிறது.

இத் திட்டங்களையும், மேலும் பல பயனுள்ள திட்டங்களையும் பற்றி விபரமாக அறிந்து கொள்ள அருகிலுள்ள ஐஓபி கிளையில் விசாரிக்கவும், அல்லது எங்களுக்கு எழுதினால் 'உங்கள் பணத்தை வளரச் செய்ய பதினொன்று வழிகள்' என்ற இலவசப் பிரசுரத்தை அனுப்புகிறோம்.

**தேவைக்கு மட்டுமே இன்று செலவழியுங்கள். மிகுதியை நாளைக்கென்று சேமியுங்கள்.**



**இந்தியன் ஓவர்சீஸ் பாங்க்**

உங்கள் வளர்ச்சிக்கோர் உத்தம நண்பன்




IOB-1325

# இரவில் கேட்ட



# இரவல் குரல்!

அடம் பிடிக்கும் குழந்தையைப் போல், விட்டு விட்டுச் சீராக அலறிக் கொண்டிருந்தது. அந்த வெளிர்ப் பச்சை வண்ண டெலிபோன். யாரும் எடுக்காமல் போகவே ஒரு நிமிடம் மௌனம் சாதித்துவிட்டு மீண்டும் கதற ஆரம்பித்தது. கம்பளிப் போர்வையின் கதகதப்பில் மெய்ம்மறந்து தூங்கிக் கொண்டிருந்த பிரகாஷுக்கு எரிச்சலும் கோபமும் சம விகிதத்தில் கலந்து வந்தன.

பிரகாஷ் செயற்கையாகக் கொட்டாவி ஒன்றை வரவழைத்துக் காற்றில் கலக்கிறான். கொட்டாவி விட்டுக் கொண்டே எழுந்து போய் ரிஸீவரின் கழுத்தைப் பிடித்துத் தூக்கினான்.

''ஹலோ....'' பிரகாஷ் காதைச் சொறிந்து கொண்டே கேட்டான்.

மறுமுனை அவசரம் அவசரமாக, ''ஹலோ! நான் டாக்டர் மார்த்தாண்டம் பேசுகிறேன். பேசுவது மிஸ்டர் பிரகாஷா ?'' என்று கேட்டது.

''எஸ்! டாக்டர் !''

''மிஸ்டர், பிரகாஷ் ! இந்த அகால வேளையில் உங்களுக்குத் தொல்லை தருகிறேன். நான் ஓர் இக்கட்டில் மாட்டிக் கொண்டிருக்கிறேன். என்னை ஒருவன் மிரட்டுகிறான்.... ஐ மீன்... பிளாக்மெயில் செய்கிறான்.''

''எதற்காக என்று சொல்ல முடியுமா ?''

''ஸாரி... மிஸ்டர் பிரகாஷ்... அதை வெளியே சொல்வதாக இருந்தால் போலீஸ் உதவியை நாடியிருக்க மாட்டேனா ? நான் உங்களை அணுகுவதற்குக் காரணமே....''

'' ரைட்டோ.... டாக்டர்.... மிரட்டல் என்று சொன்னீர்களே.... எப்படிப்பட்ட மிரட்டல் ?''

''பணம் கேட்கிறான்...''

'' எவ்வளவாம்...?''

''பத்தாயிரம்...''

''கொடுத்து விடுங்களேன்...''

மறுமுனையில் சில விநாடிகள் மௌனம். ''மிஸ்டர் பிரகாஷ் ! இது வேடிக்கைப் பேச்சுக்கு நேரமில்லை. இப்போது மணி 10.10. இன்னும் அரை மணி நேரத்தில் அந்தப் பிளாக்மெயிலர் என் வீட்டுக்கு வருகிறான். என் பிளாக்மெயில் சம்பந்தப்பட்ட தஸ்தாவேஜுகளோடுதான். வருகிறவன் என்னைவிட 25 கிலோ வெயிட் அதிகம் என்பது மட்டுமல்ல. கண்ணின் பாப்பாவைக்கூடக் குறி தவறாமல் சுடுவதில் தேர்ந்தவன். அவன் பத்தாயிரத்துக்கு விலை பேசியிருக்கிறான். இங்கே வந்த பிறகு அதிகமாகக் கேட்கலாம்.... அந்த நிலைமையில்தான் நீங்கள் எனக்குத் தேவைப்படுகிறீர்கள். நீங்கள் என் வீட்டிலேயே மறைவாய் இருந்து கவனிக்க வேண்டும். ஒரு பாதுகாப்புக்காக.... அவ்வளவுதான்.''

கார்த்திகா.

மார்ச் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசுக் கதை:

''ஓ... கே... டாக்டர்... நான் உங்களுடைய பாடிகார்டாக இருக்க வேண்டும். அவ்வளவுதானே.... என் பீஸ் ஐந்நூறு ரூபாய்....''

''ம்... வாங்கிக் கொள்ளுங்கள்.''

முகவரியைப் பெற்றுக் கொண்டு, ''இதோ, பத்து நிமிடங்களில் அங்கே வந்துவிடுகிறேன்'' என்றான் பிரகாஷ்.

பிரகாஷ் அசோக் நகரை அடைந்தபோது நேரம் 10—25. மார்கழியின் பின் பனிக்கால இரவு அது. ஈரமான குளிர் காற்று. ஊசி முனைகளாய் உருவெடுத்து, கூர்மையைப் பிரகாஷின் உடலில் சோதித்தன. பிரகாஷ் வெஸ்பாவில் 9வது கிராசிங் லேனைத் தேடினான். சிரமம் இல்லாமல் கிடைத்தது. ஒன்பதாவது கிராசிங் லேனின் வால் பாகத்திலிருந்து வீட்டு எண்களை எண்ணிக் கொண்டே போனான். 16.... 15... 14... 13.... 12... 11...10...

பிரகாஷ் வெஸ்பாவை நிறுத்தினான். வீட்டை நிமிர்ந்து பார்த்தான். வீடு அரை இருட்டில் சிக்கியிருந்தது. உள்ளே பழுப்பேறிப் போன நாற்பது வாட்ஸ் பல்பு ஒன்று மட்டரகமான மஞ்சள் ஒளியை ஜன்னல் வழியே சிதறிக் கொண்டு முன்புறத் தோட்டத்தில் பொழிந்தது.

பிரகாஷ் குளிரில் மரத்துவிட்ட கைகளைத் தேய்த்துக் கொண்டே, — திறந்து கிடந்த காம்பவுண்டு கேட்வழியாக உள்ளே நுழைந்து காலிங் பெல்லைக் கதற வைத்தான்.

விநாடிகள் செத்து நிமிஷங்களாக மாறியது. யாரும் வரவில்லை. கதவைத் தள்ளிப் பார்த்தான். கதவு திறந்து கொண்டது. அறைக்குள் நுழைந்தான்.

அரை இருட்டு.

''டாக்டர்... ஸார்...! நான் பிரகாஷ்...'' சொல்லிப் பார்த்தான்.

உள்ளேயிருந்து எந்தவிதமான பதிலும் வரவில்லை.

சுவரில் ஸ்விட்சைத் தேடினான். பியானோ கட்டைகளாக ஸ்விட்ச் போர்டு கைக்கு அகப்பட்டது. அழுத்தினான் ஒன்றை. அறையின் மூலையிலிருந்து டேபிள் ஃபேன் சுழன்றது. மற்றொன்றை அழுத்தினான். ட்யூப் லைட் பக் பக் என்றது. மூச்சுத் திணறி... பளீரென்று சிரித்து உயிர் பிடித்தது. பிரகாஷ் அறையைச் சுற்றி வலதுபுறமாக வந்தபோது எதிரே — மார்த்தாண்டம் சிரித்தார்.... சுவரில்.... போட்டோவில் !

வரவேற்பறையை ஒட்டினாற்போல் இருந்த இடது பக்க பிரைவேட் அறையில் காகிதங்கள் சலசலக்கும் சத்தம் கேட்டது. பிரகாஷ் திரும்பினான். பிரைவேட் அறைக்கு மேலே உஷா சுழன்று கொண்டிருந்தாள். கன்சல்டிங் ரூம்... டாக்டர் மார்த்தாண்டம் எம். எஸ். இன் அவுட்.... 'Doctor is in. Be seated' பெயர்ப் பலகைகள் கண்ணில் பட்டன.

தள்ளு கதவைத் திறந்து அறைக்குள் எட்டிப் பார்த்தான்.

பத்தடிக்குப் பத்தடி சதுர மேஜைக்குப் பின்னால் சுழல் நாற்காலி ஒன்றில் டாக்டர் சரிந்து செத்துக் கிடந்தார்.

**டா**க்டர் மார்த்தாண்டத்தின் கழுத்தை, துப்பாக்கி ரவைகள் சல்லடை ஆக்கியிருந்தன. நீல வண்ண டிஸ்டெம்பர் பூசப்பட்ட சுவர்களில் ரத்தம் சிதறி உறைந்திருந்தது. டாக்டருடைய மூக்குக்கண்ணாடி மூக்கு நுனியில் ஊசலாடியது. கண்கள் திறந்திருந்தன. அவற்றில் பயம் இருந்தது.

பிரகாஷ் நிதானமாகச் செயல்பட்டான். முதல் காரியமாக இன்ஸ்பெக்டர் கோகுல்நாத்தை டெலிபோனில் கூப்பிட்டான். விவரத்தைச் சொல்லிவிட்டு அறையை அங்குலம் அங்குலமாக ஆராயத் தொடங்கினான்.

திடீரென்று பக்கத்து அறையில் ஏதோ சத்தம் கேட்டது. யாரோ எதையோ எடுக்கும் சத்தம். பிரகாஷ் உஷாரானான்... தள்ளு கதவை மிக மெதுவாகத் திறந்து





**படகில் டர்னர்!**

சென்னையில் வெள்ளத்தைத் தொடர்ந்து கிரிக்கெட் மாட்சு நடந்தபோது பம்பாயில் அடிபட்ட ஜோக் என்ன தெரியுமா?

''காப்டன் டர்னர் ''பிட்ச்'' எப்படி இருக்கிறது என்பதைப் பார்ப்பதற்காகப் படகில் போனார்!'' - நிர்மல்

---

அடுத்த அறையைப் பார்த்தான். அறையில் யாரும் இல்லை.

கறுப்புப் பூனை ஒன்று பிரகாஷைப் பார்த்துச் சீறியது.

''சனியன்!'' என்றபடி பேப்பர் வெயிட்டை எடுக்கப் போன பிரகாஷ் ஒரு விநாடி திகைத்தான். பேப்பர் வெயிட்டின் அடியில் பாஸ்போர்ட் அளவில் ஒரு போட்டோ இருந்தது. அது ஒரு பெண்ணின் போட்டோ.

இன்ஸ்பெக்டர் கோகுல்நாத் ஆறிப் போன டீயை நகர்த்தியவாறே எதிரில் இருந்த பிரகாஷைப் பார்த்தபடி, டாக்டர் உங்களுக்கு டெலிபோன் செய்தபோது நேரம் 10.10 என்கிறீர்கள். ஆனால் போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்டில் டாக்டரின் மரணம் இரவு எட்டு மணியிலிருந்து 8-30 மணிக்குள் நிகழ்ந்திருப்பதாக இருக்கிறது. டாக்டர் எப்படி உங்களோடு பேசியிருக்க முடியும்? டாக்டர் பரமேசுவரனின் போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட்கள் இதுவரையில் பொய்யானதில்லையே!'' என்றார்.

''அப்படியானால் இந்தக் கொலை திட்டமிடப்பட்டு மிகவும் சாமர்த்தியமாகச் செய்யப்பட்டிருக்கிறது. முதலில் இந்தப் போட்டோவில் இருக்கும் பெண் யார் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும்....'' என்ற பிரகாஷ் தன் சட்டைப் பையிலிருந்தும் ஒரு போட்டோவை உருவிக் கோகுல்நாத்திடம் கொடுத்தான்.

''டாக்டர் மார்த்தாண்டம், கொலை செய்யப்பட்ட அறையிலிருந்து கண்டெடுக்கப்பட்ட போட்டோதானே இது...?''

''எஸ்.... இந்தப் போட்டோவில் இருக்கும் பெண், டாக்டரோடு எப்படிச் சம்பந்தப்படுகிறாள் என்பதைப் பொறுத்தது இந்தக் கேஸின் போக்கு....''

''டாக்டருடைய டயரியில் இந்தப் பெண்ணைப் பற்றிய விவரம் ஏதாவது கிடைத்ததா, மிஸ்டர் பிரகாஷ்?'' — கோகுல்நாத் ஆர்வம் தொனிக்கக் கேட்டார்.

உதட்டைப் பிதுக்கினான் பிரகாஷ். ''டாக்டர் டயரியில் ஒன்றும் இல்லை..... வெற்றுத் தாள்கள் ஏராளம். சில தாள்களில் புரியாத இங்கிலீஷில் விளங்காத மெடிக்கல் வார்த்தைகள்....''

''பின்னே இந்தப் போட்டோப் பெண்ணை அணுகும் வழி?'' — கோகுல்நாத் கேட்டார்.

''டாக்டருடைய 'குட்ஹெல்த் நர்சிங்ஹோம்' ஏதாவது 'க்ளு' தருகிறதா, பார்க்க வேண்டும்.''

''குட் ஹெல்த் நர்சிங் ஹோம்'' டாக்டரைப் பறிகொடுத்த துயரத்தில் ஆழ்ந்திருந்தது. ஸ்கூட்டர் சத்தம் கேட்டு ஒரு நர்ஸ் எட்டிப் பார்ப்பது தெரிந்தது. அதைத் தொடர்ந்து நர்சிங்ஹோமின் ஜன்னல்களில் வேறு சில நர்ஸ் முகங்கள் தென்பட்டன. ஸ்கூட்டரை நிறுத்தினான், பிரகாஷ்..... கோகுல்நாத் பின் சீட்டிலிருந்து இறங்கினார்.

பிரகாஷ் சாவிக் கொத்தைச் சுழற்றியபடியே நர்சிங்ஹோமின் வராந்தாவில் நடை போட்டான். வராந்தாவின் கோடியில் டாக்டரின் அறை தென்பட்டது. ''டாக்டர் மார்த்தாண்டம் — அவுட்' — பெயர்ப் பலகையைப் பார்த்து — அதன் பொருத்தத்தைப் புன்னகையில் கோகுல்நாத்துக்குத் தெரியப்படுத்தினான்.

அறைக்குள் நுழைந்த பிரகாஷ் வாஷ் பேஸினில் எதையோ கழுவிக் கொண்டிருந்த இளம் நர்ஸைப் பார்த்துக் கேட்டான்.

''உங்கள் வேலை முடிந்துவிட்டதா, ஸிஸ்டர்?''

பிரகாஷை ஏறிட்டாள். கோகுல்நாத்தைப் பார்த்தாள். ''இதோ!'' என்றாள்.

''நாங்கள் போலீஸ் டிபார்ட்மெண்ட்... உங்கள் டாக்டர் கொலை செய்யப்பட்டதன் சம்பந்தமாகச் சில தகவல்கள் வேண்டும்.''

நர்ஸ் கைகளை முரட்டு டவல் ஒன்றினால் துடைத்தபடி நின்றாள்.

''ஸிஸ்டர்... இங்கே எத்தனை பேர் நர்ஸாகப் பணியாற்றுகிறீர்கள்.....?''

''ஐந்து பேர்....!''

''பெயர்களைச் சொல்ல முடியுமா?''

''நீலா, மேரி, பத்மாவதி, சாந்தினி, சுஜாதா....''

''இதில் உங்கள் பெயர் சுஜாதா என்று நினைக்கிறேன்...''

''நோ.. யூ.. ஆர் ராங்... நான் சாந்தினி.''

''ஸிஸ்டர்!, இந்தப் போட்டோவைப் பாருங்கள். இந்தப் போட்டோவில் இருக்கும் இந்தப் பெண் இங்கே நர்ஸாக இருக்கிறாளா?'' — போட்டோவைக் காட்டிக் கேட்டான் பிரகாஷ்.

சாந்தினி போட்டோவை வாங்கிப் பார்த்தாள். உதட்டைப் பிதுக்கிவிட்டுச் சொன்னாள். ''எனக்குத் தெரிந்தவரையில் இல்லை! ஆனால்... சுஜாதா... மேரி... இருவரும் எனக்கு ஒரு வருடம் முந்திச் சேர்ந்தவர்கள்.''

''அவர்களுக்கு இந்தப் பெண்ணைத் தெரிய நியாயம் இருக்கிறதா?''

''அவர்களைத்தான் கேட்க வேண்டும்.''

''கொஞ்சம் அழைக்கிறீர்களா?''

மேரி உதட்டைப் பிதுக்கினாள். ஆனால்.... சுஜாதா?

சுஜாதாவின் புன்னகையைக் கண்டதும் பிரகாஷின் மனம் துள்ளியது.

''இந்தப் பெண்ணை எனக்குத் தெரியும்.'' சுஜாதா சன்னமான குரலில் சொன்னாள்: ''இவளை டாக்டரோடு பார்த்திருக்கிறேன்!''

''எந்த இடத்தில்?''

''பல இடங்களில்... தியேட்டரில்.... பீச்சில்...''

''இங்கே... நர்சிங் ஹோமில் பார்த்திருக்கிறீர்களா?''

''இல்லை...''

# எங்களுடைய வேகத்திற்கு எல்லை இல்லை

அது உங்களுடைய நன்மைக்காக, தொடர்ச்சியாக, நேரத்தை வீணாக்காது பழுதுபார்க்கும் எங்கள்முறை, உங்கள் வண்டி வீணாகப் பணிமனையில் நிற்கும் நேரத்தைக் குறைக்கிறது.

இது, வண்டி ஓடாமல் நிற்பதால் விளையும் நஷ்டத்தைக் குறைப்பது மட்டுமல்ல; பழுது பார்க்கும் நேரம் குறைக்கப் படுவதால், அதற்கான செலவும் உங்களுக்கு மிச்சப்படுகிறது.

உங்களுடைய நன்மைக்காக, வண்டியில் பழுது ஏற்பட்டவுடன் எங்களை அணுகுங் கள். உங்கள் லாரி அல்லது பஸ்ஸின் அவசியமான பராமரிப்பைத் தள்ளிப் போடுவதன் மூலம், செலவைக் குறைப் பதாக எண்ணவேண்டாம். இத்தாமதத் தினால் வண்டி மிகப் பழுதடைந்து விடக் கூடும்.

டிவிஎஸ் மிகத்திறமையான, பயிற்சி பெற்ற ஊழியர்களைக் கொண்டு, திறன் மிக்க இயந்திரங்கள் மூலம் உங்கள் வண்டிகளைப் பழுது பார்க்கின்றனர். அதுமட்டுமல்ல,

ஒவ்வொரு டிவிஎஸ் பணிமனையும், புகழ் பெற்ற தயாரிப்பாளர்களின் அசல் மோட்டார் உறுப்புகளையே உபயோகிக்கிறது.

ஆம். எல்லை இல்லை எங்கள் வேகத்திற்கு.

**உங்கள் நம்பிக்கைக்குரியது டிவிஎஸ்**




டி.வி. சுந்தரம் ஐயங்கார் அண்ட் சன்ஸ் லிமிடெட்,
மதுரை மற்றும் கிளைகள்.

SAA/TVS/2306

''இந்தப் பெண்ணுக்கும் அவருக்கும் உள்ள பழக்கம் எந்த உறவை அடிப்படையாகக் கொண்டது என்று சொல்ல முடியுமா ?''

சுஜாதா தெளிவாகப் பேச ஆரம்பித்தாள். ''அவர்கள் உறவில் 'எல்லே மீறல்' இருந்திருக்கலாம். அந்தப் பெண் திருமணமானவள்... கணவர் எங்கோ வட நாட்டுக் கிராமத்தில் இருக்கிறாராம். இவள்..இங்கே.. வி.பி.வி.லே. அவுட்டில் இருக்கிறாள்.''

''தேங்க்ஸ்... மிஸ் சுஜாதா... பை த பை.. நீங்கள் எங்கே குடியிருக்கிறீர்கள்.... ?'' பிரகாஷ் எழுந்தான்.

''பாபா காலனியில் பெண்கள் விடுதியொன்றில்....''

''இந்தப் பெண்ணின் பெயரைச் சொல்ல முடியுமா ?'' பிரகாஷ் போட்டோவைச் காட்டினான்.

''சியாமளா !'' — என்றாள் சுஜாதா.

சியாமளா 'சிக்'கென்றிருந்தாள். சிப்பிளாக இருந்தாள். கூந்தலைப் படிய வாரி ஒற்றைப் பின்னலாய்ச் சரித்திருந்தாள். லேசாகப் பவுடர் பூசிச் செஞ்சாந்து இட்டிருந்தாள். பிரகாஷையும், கோகுல்நாத்தையும் பார்த்த போது குப்பென்று ஊறிய வியர்வையில் சற்றே மினுமினுத்தாள்.

''உள்ளே போகலாமா, மிஸ் சியாமளா ?'' பிரகாஷ் கேட்டான். திறந்த கதவை ஒரு கையால் பிடித்தபடி நின்றிருந்த சியாமளா துணுக்குற்றுப் பின்வாங்கினாள்.

'' நீங்கள்...?''. — குரலில் நடுக்கம் நிரவி ஒலித்தது.

''டாக்டரின் கொலை சம்பந்தமாக உங்களோடு பேச வேண்டும்.''

''எந்த டாக்டர் ?''

''டாக்டர் மார்த்தாண்டத்தை உங்களுக்குத் தெரியாது ?''

''ஓ... அவரா ?'' — சியமளாவின் குரலில் அலட்சியம் வழிந்தது. சியாமளா உள்ளே நகர்ந்தாள். சோபா கம் பெட்டைக் காட்டி உட்காரச் சொன்னாள். அவர்களுக்கு எதிரே தானும் அமர்ந்தாள். சுண்டு விரல் நகத்தைக் கடித்தபடி பிரகாஷை ஏறிட்டுப் பார்த்து, ''என்னிடம்...'அந்த மோசக்காரனைப் பற்றி' என்ன எதிர்பார்க்கிறீர்கள்?'' என்று கேட்டாள். அவர்கள் திகைத்தார்கள்,

''பின்னே ! அவனைப் பற்றி எப்படிப் பேச வேண்டும் ? டாக்டராம் டாக்டர்! டாக்டரின் புனிதத் தொழிலைக் கறைப்படுத்தும் நய வஞ்சகன்...'' சியாமளா பொங்கினாள்.

'' என்ன சொல்கிறீர்கள்?''

சியாமளா திடீரென்று மௌனமானாள். கண்கள் கலங்கியிருந்தன. மார்பு விம்மியது. மெதுவான குரலில் சொன்னாள். ''ஒருவருடைய மரணத்தைக் கண்டு சந்தோஷப்படக் கூடாது என்று சொல்வார்கள். ஆனால் இந்த டாக்டரின் மரணம் என்னைச் சந்தோஷப் படுத்தியது. டாக்டரைச் கட்டவனை நான் மனமார வாழ்த்துகிறேன்....''

''காரணம் ?'' — பிரகாஷ் கூர்மையாகச் சியாமளாவை எடை போட்டான். ''காரணம் !.... என்னை 'பிளாக்மெயில்' செய்து என் கற்பைச் சூறையாடியவன் — என்னைத் தன் கைப் பொம்மையாக நினைத்துத் தன்



''மணி, குதிரைப் பந்தய மைதானத்திலே தினம் பணம் சம்பாதித்து விடுகிறான்.''
''எப்படி?''
''சுண்டல் விற்கிறான்.''
— எஸ். லலிதா

இஷ்டப்படி விளையாடியவன் — என் நகைகளை மிரட்டி மிரட்டிப் பறித்தவன் — இவன்... இவன்... ஓர் அந்தஸ்துள்ள டாக்டராம் ''— சியாமளா வெடித்தாள்.

கோகுல்நாத் குறுக்கிட்டுக் கேட்டார்.

'' உங்களை டாக்டர் எதற்காகப் பிளாக்மெயில் செய்தார் ? அதைச் சொல்ல முடியுமா ?''

சியாமளா தலை குனிந்தாள். சில விநாடிகளுக்குப் பின் நிமிர்ந்தாள்.

'' என்னைப் பற்றிய ஓர் உண்மையை உங்களிடம் சொல்வதில் என் மதிப்பு குறைந்தாலும் அதை நான் மறைக்கப் போவதில்லை. என் கணவர் ஒரு ரெப்ரஸன்டேடிவ் ! வடக்கே மாதக் கணக்கில் நகரங்களில் சுற்றுவார்... என்னைப் பற்றிய கவலை அவருக்கு எள்ளளவும் இல்லை. பணம் சம்பாதிப்பதில் ஒரு வெறியே அவருக்கு ஏற்பட்டிருந்தது. நான் இங்கு தனியாக இருப்பேன் என்று அவருக்குத் தெரியும். இரவில் எனக்குத் தனிமைதான். இதை எவனோ ஒருவன் பயன்படுத்தி ஒருநாள் நள்ளிரவில்... என்னைப் பலவந்தமாக...

''அதன் விளைவாக உருவான பந்தத்தைச் சிதைக்கத்தான் டாக்டர் மார்த்தாண்டத்தை நாடினேன். டாக்டர் நல்லவர்தான். என்னைப் பரிசோதிக்கும் வரை. நான் உண்மையைச் சொன்னேன். டாக்டர் பச்சாத்தாபப்படுவது போல் நடித்தார். அன்றைக்கு என் உடம்பைத் தொட்டவர் — பிறகு விரும்பும்போது எல்லாம் என்னைத் தொட்டார். என் நகைகளைக் கேட்டார். கொடுக்காவிட்டால் என் கணவருக்கு என்னைப் பற்றிய உண்மைகளைச் சொல்லி விடுவதாக மிரட்டினார்... என் கணவர் எனக்கு மாதா மாதம் அனுப்பும் முந்நூறு ரூபாய் பணத்திலும் பங்கு கேட்டார். இன்னும் சில நாட்கள் போயிருந்தால் டாக்டரை நானே சுட்டுக் கொன்றிருப்பேன். எவனோ முந்திக் கொண்டான்.''

சியாமளா அழுகை வெடிக்க, குரல் கம்மச் சொல்லி முடித்தாள். பிரகாஷ் தொண்டையைக் கனைத்துக் கொண்டான். ''மிஸஸ் சியாமளா ! உங்கள் கதை பரிதாபத்துக் குரியது. உங்களை டாக்டர் பிளாக்மெயில் செய்தார். டாக்டரை வேறு எவனோ ஏதோ ஒரு காரணத்துக்காகப் பிளாக்மெயில் செய்திருக்கிறான். டாக்டர் வேறு ஏதோ சட்ட விரோத நடவடிக்கையில் ஈடுபட்டிருக்கலாம். அதைப் பற்றித் தங்களுக்கு ஏதேனும் தகவல் தெரியுமா ?''

'' நோ ! எனக்கு அவனைப் பற்றி ஒன்றும் தெரியாது. அவன் ஆசைகளை நிறைவேற்றும் ஒரு மெஷின் நான் ! அவனுடைய இதர விஷயங்களில் நான் தலையிடுவதில்லை.''

''மிஸஸ் சியாமளா ! உங்கள் அறையை நாங்கள் சோதனையிட நீங்கள் ஒன்றும் தடை விதிக்க மாட்டீர்களே ?''

'' தாராளமாகச் சோதனையிடலாம் !''

சோதனையிட்ட பிரகாஷ் மிகவும் சோர்ந்திருந்தான்.

ஒரு மாதம் ஓடிவிட்டது.

பிரகாஷினால் எந்த முடிவுக்கும் வர முடியவில்லை. டாக்டர் மார்த்தாண்டத்தின் கொலை சம்பந்தமாக இதுவரைக்கும் ஒரு துரும்பைக் கூடப் பிடிக்க முடியவில்லை. கொலையில் ஏராளமான குழப்பங்கள். போஸ்மார்ட்டம் ரிப்போர்ட் டாக்டர் இறந்தது எட்டு மணியிலிருந்து 8–30க்குள் என்கிறது. ஆனால் டாக்டர், பிரகாஷுக்கு போன் செய்தபோது நேரம் 10.10. டாக்டர் சியாமளாவைப் பிளாக்மெயில் செய்திருக்கிறார். டாக்டரை வேறு எவனோ பிளாக்மெயில் செய்திருக்கிறான் ? யார் அவன் ? டாக்டர் கொலையுண்ட அறையில் யாரும் நடமாடியதற்கான அறிகுறியைக் காணோம்! சின்னச் சின்னக் குழப்பங்கள் பிரகாஷின் மனத்தை அலைக்கழித்தன.

அன்றைக்கு வெள்ளிக்கிழமை. எலெக்ட்ரிக் ஷேவரில் முகத்தைப் பளபளப்பாக்கிக்கொண்டிருந்தான் பிரகாஷ். நேரம் ஒன்பது.

கதவை யாரோ 'பொட பொட' என்று தட்டும் சத்தம். அதைத் தொடர்ந்து 'அங்கிள்' 'அங்கிள்' என்ற குரல்.

'ஓ. எதிர் வீட்டு ரமாவா?' — தனக்குள் புன்னகை செய்து கொண்ட பிரகாஷ், ''எஸ்'' என்றான்.

''மே... ஐ கம் இன்... ஹானரபிள் அங்கிள்?'' என்று கேட்டவாறு கதவைத் திறந்து கொண்டு ஓடி வந்தாள் ரமா. அவள் பின்னே அவள் வயதில் வேறு ஒரு சிறுமி.

''ரமா! யார் இது உன் சிநேகிதியா ?''

''யெஸ்.... அங்கிள் இவள் உஷாராணி ! செவன்த் 'பீ' செக்ஷனில் படிக்கிறாள். இன்றைக்கு ஸ்கூலில் ஆன்டு விழா. 'பேரண்ட்ஸ் டே'.... நாடகம் போடுகிறோம். உஷா தான் ராஜா வேஷம் போடுகிறாள்..... நான் இவளுக்கு மந்திரி.''

உஷா முதல் தடவையாக வாயைத் திறந்தாள். ''அங்கிள் நீங்களும் கண்டிப்பாக நாடகத்துக்கு வரணும். நாடகம் முடிஞ்ச பிறகு என்னோட 'மிமிக்ரி' இருக்கு. எல்லார் மாதிரி பேசிக் காட்டுவேன்....'' — உஷாவின் குரலில் பெருமிதம் பொங்கி வழிந்தது.

ரமா உற்சாகத்தோடு ஆமோதித்தாள். ''அங்கிள் ! ஹா.... தவளை மாதிரி நாய் மாதிரி... பூனை மாதிரி. கத்துவா... நேரு மாதிரி இங்கிலீஷிலே பேசிக் காட்டுவா... இந்திராகாந்தி மாதிரி ஜோராப் பேசுவா.''

''ரியலி!'' — பிரகாஷ் அதிசயப்படுபவன் போல் கேட்டான். ''நீங்கள் வேண்டுமானால் பாருங்களேன். உஷா ! நேரு மாதிரி பேசிக் காட்டடி....'' ரமா சொன்னாள். உஷா பிகு செய்து கொள்ளவில்லை. தொண்டையைச் செருமிக் கொண்டாள். மூக்கைச் சுளித்துக் கொண்டாள். அடுத்த விநாடி... எழுபது வயதுக் கிழவர் ஒருவரின் கட்டைக் குரலில் ஆங்கிலத்தில் பேசத் தொடங்கினாள்.

பிரகாஷ் எலெக்ட்ரிக் ரேஸரைக் கீழே வைத்தான். திகைத்துப் போய் உஷாவைப் பார்த்தான். அவன் பார்வையில் பிரமிப்பு தெரிந்தது.

'' ரியலி ஒண்டர்புல்.....'' — கையைத் தட்டினான்.

''இதையெல்லாம் யாரிடம் கற்றுக் கொண்டாய் உஷா ? யார் சொல்லித் தந்தார்கள்?'' பிரகாஷ் ஆவலோடு கேட்டான்.

அவள் தயங்கினாள். ரமா குறுக்கிட்டாள்: ''அங்கிள், அவளை நானே கேட்டு அப்புறமாய்ச் சொல்றேன். இன்றைக்குச் சாயந்திரம் ஆறுமணிக்கு ஃபங்ஷன்.... கரெக்டா வந்துடணும். வீ வில் எக்ஸ்பெக்ட் யூ.....''

சிகரெட்டின் நுனிச் சாம்பலைத் தட்டினார், இன்ஸ்பெக்டர் கோகுல்நாத்.

எதிரே பிரகாஷ் பேப்பர் வெயிட்டை உருட்டிக் கொண்டிருந்தான். இடம் பிரகாஷின் அறை. நேரம் காலை பத்தரை மணி. ஜன்னலுக்கு வெளியே ஊமை வெய்யில் காய்ந்து கொண்டிருந்தது.

''மேலிடம் ரொம்பவும் அவசரப்படுகிறது.''

''கொலைகாரன் அவசரமாக வந்து சிக்க மாட்டேனென்கிறானே .... நாம் என்ன செய்ய...?'' பிரகாஷ் புன்னகையோடு சொன்னான். கோகுல்நாத் பெருமூச்சு விட்டார். ''இது ஒரு தலைவலி கேஸ்!''

''சியாமளாவைக் கண்காணிக்க இரண்டு கான்ஸ்டபிள்களைப் போட்டோம். ஓர் உபயோகமான தகவலும் இல்லை'' தொடர்ந்து சொன்னார் கோகுல்நாத். பிரகாஷ் சட்டெனப் பேச்சை மாற்றினான். ''மிஸ்டர் கோகுல்நாத், போன வாரம் ஒரு பெண் உஷா என்று பெயர்... என்னமாய் மிமிக்ரி செய்கிறாள்.. நேரு மாதிரி... இந்திரா காந்தி மாதிரி... அப்படியே அசந்து போய்விட்டேன்!''



## ஸ்ரீ நாராயண தீக்ஷிதருக்குச் சதாபிஷேக வைபவம்



ஆதி கவி வால்மீகி இயற்றிய ஸ்ரீமத் ராமாயணத்தை லவகுசர்கள் கானம்செய்த பிரகாரம் கூறித் தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் தம் புகழ் சிறக்க உபந்யாசம் செய்த சகோதரர்கள் சேங்காலிபுரம் ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதரும் ஸ்ரீ நாராயண தீக்ஷிதரும் ஆவார்.

குலம் விளங்கப் பேரனுக்குப் பிள்ளையைக் கண்டவர்கள் சதாபிஷேகம் செய்து கொள்ளலாம் என்ற சாஸ்திர சம்பிரதாயத்தை ஒட்டி, பிரவசன திலகமாகவும் வாஜபேயயாஜியாகவும் விளங்கும் '**பிரும்மஸ்ரீ நாராயண தீக்ஷிதர்** அவர்களுக்குச் சமீபத்தில் கும்பகோணத்தில் வெகு விமரிசையாகச் **சதாபிஷேகம்** நடந்தேறியது.

## கலைச் செல்வி குமாரி சுகந்தி



பம்பாய், சென்ட்ரல் ஆட்டோ மோபைல்ஸ் பிரைவேட் லிட்., நிறுவனத்தைச் சேர்ந்த ஸ்ரீ டி.வி. ராமஸ்வாமி அவர்களின் குமாரி **சுகந்தி** ஒரு விளையும் பயிர். மூன்றரை வயதிலேயே நடனத்தில் ஆர்வம் காட்டிக் கலா சதனத்தின் மாணவியாக வளர்ந்தவள். சின்னஞ்சிறு பிராயத்தில் ஸ்ரீ மணியிடம் மணியான சிட்சை பெற்று இன்று நடனமணியாகத் திகழுகிறார். சமீபத்தில் சுவாதித் திருநாள் கலாக்ஷேத்திரத்தின் விழாவில் அற்புதமாக நடனமாடி அவையை மகிழ்வித்தார்.



பஞ்சாப் நேஷனல் பாங்க், மல்லேஸ்வரம் கிளை ஆபீஸர் கருவேலி ஸ்ரீ கே. பி. சுப்ரமணியன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி **ஜெயராமனுக்கும்** அசிக்காடு ஸ்ரீ வி. வேணுகோபாலன் அவர்கள் குமாரத்தி சௌ. **பிரேமாவுக்கும்** சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்

கேஸ் சம்பந்தமாகத் தான் பேசியதைக் கவனிக்காமல் 'மிமிக்ரி' பற்றிப் பேசும் பிரகாஷை எரிச்சலோடு பார்த்தார் கோகுல்நாத்.

"இத்தனைக்கும் அவளுக்கு வயது என்ன என்கிறீர்கள்...? பன்னிரண்டு இருக்கலாம். என்னமாய்ப் பேசுகிறாள்... ரொம்பப் புத்திசாலிப் பெண்!"

"வேண்டுமானால் ஒரு மாலையை வாங்கிப் போட்டுவிட்டு வாங்களேன்..." கோகுல்நாத் எரிச்சலோடு சொன்னார்.

அதே நேரம் டெலிபோன் கதறியது.

பிரகாஷ் ரிஸீவரை எடுத்தான். "ஹலோ ஹியர் பிரகாஷ்...!"

மறு முனையில் பெண் குரல் இனிமையாக ஒலித்தது. "ஸார்... நான் சுஜாதா...நர்ஸ் சுஜாதா பேசுகிறேன்...."

"என்ன ஸிஸ்டர்? என்ன விஷயம்? ஏன் உங்கள் குரல் நடுங்குகிறது?"

"ஸார்! டாக்டர் கொலை சம்பந்தமாக ஒரு தகவல் கிடைத்திருக்கிறது.... கொலையைச் செய்தவள் சியாமளா தான்..."

"எப்படிச் சொல்கிறீர்கள் ஸிஸ்டர்...?"

"இன்று காலை பத்து மணிக்கு நானும் என் தோழி சாந்தியும் ஒரு கல்யாணத்துக்குப் போய்விட்டுச் சியாமளா வீட்டு வழியாகத் திரும்பிக் கொண்டிருந்தோம். வாசலில் சியாமளா நின்றிருந்தாள். எங்களைப் பார்த்ததும் உள்ளே அழைத்தாள். என் தோழி சாந்தினி அவளுக்கு அறிமுகமானவள். சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு எங்களுக்குக் காப்பி கலக்கச் சமையலறைக்குள் போனாள். நான் புத்தகம் ஏதாவது கிடைக்குமா என்று மேஜை டிராயரை இழுத்தேன். அதற்குள் ரிவால்வர் இருந்தது. ரிவால்வர் முழுதும் சேறு. எங்கேயாவது புதைத்து வைத்திருக்கலாம். ரிவால்வரைப் பார்த்ததும் என் உடம்பே ஆடிவிட்டது. அதற்குப் பிறகு அங்கே இருக்க எனக்கு இருப்புக் கொள்ளவில்லை. வெளியே வந்ததும் முதல் காரியமாக டெலிபோன் பூத்திலிருந்து உங்களுக்கு போன் செய்தேன்."

"தட்ஸ் குட் மிஸ் சுஜாதா... ஆமாம் நீங்கள் எந்த பூத்திலிருந்து பேசுகிறீர்கள்?"

"அசோக்நகர் எக்ஸ்டென்ஷன் பூத்திலிருந்து பேசுகிறேன். நான் இங்கேயே இருக்கிறேன். நீங்கள் ஜீப்பில் வந்து என்னையும் அழைத்துச் செல்லுங்கள். சியாமளா வீட்டுக்கு நானும் வருகிறேன்..."

"தட்ஸ் குட்... இதோ! நாங்கள் புறப்பட்டுவிட்டோம்."—ரிஸீவரை வைத்தான் பிரகாஷ். எழுந்தான். "மிஸ்டர் கோகுல்நாத், ஜீப்பைத் தயார் செய்யுங்கள்..."

"எங்கே போகிறோம்?"

"கொலைகாரனை... ஸாரி... கொலைகாரியைப் பிடித்து வர!"

"யார் அவள்?"

"ஜீப்பில் போகும்போது சொல்கிறேன்."

அசோக்நகர் எக்ஸ்டென்ஷன் டெலிபோன் பூத்தின் அருகே நின்றிருந்தாள் சுஜாதா.

ஜீப் நின்றது. "கெட் இன் மிஸ் சுஜாதா!"

"தேங்க்யூ..."

சுஜாதா முன் பக்கமாக ஏறி ஒதுங்கி அமர்ந்தாள். ஜீப் சீறிக்கொண்டு கிளம்பியது.

ஜீப் வளைவுகளில் சீறி நேர் பாதையில் அம்பாக மாறி முன்னால் விரைந்து கொண்டிருந்த கார்களையும், பஸ்களையும் நாசூக்காக ஒதுக்கிக் கொண்டு வி. ஸி. வி. லே அவுட் வளைவில் திரும்பிச் சியாமளாவின் வீட்டை நோக்கி விரைந்து வாசலில் டயர் தேய நின்றபோது—

சியாமளா எங்கோ புறப்பட வீட்டைப் பூட்டிக் கொண்டிருந்தாள்.

"ஒரு நிமிஷம்... மிஸஸ் சியாமளா..."—பிரகாஷ் ஜீப்பினின்றும் குதித்து வாசற்படி ஏறினான். தொடர்ந்து கோகுல்நாத்தும் சுஜாதாவும் பின்தொடர்ந்தனர்.

"ஓ...நீங்களா...?" சியாமளாவுக்கு முகம் சுருங்கியது.

"நான் அவசரமாகக் கிளம்பிக் கொண்டிருக்கிறேனே!"

"நாங்களும் அவசரமாகத்தான் கிளம்பி வந்திருக்கிறோம்."

சியாமளாவின் முகம் கோபத்தில் சிவந்தது. ஏதோ முணு முணுத்தபடி கதவைத் திறந்து விட்டாள். "என்னிடம் இன்னமும் என்ன எதிர்பார்க்கிறீர்கள்?"

பிரகாஷ் சொன்னான்: "அந்த ரிவால்வரைக் கொடுத்து விடுகிறீர்களா?"

"ரிவால்வரா?... எந்த ரிவால்வர்...?" சியாமளாவின் முகம் வியர்த்தது.

"சேறு படிந்த ரிவால்வர்... புதைத்து வைத்திருந்தீர்களே இத்தனை நாட்களாய்! அந்த ரிவால்வர்...!"

சியாமளா பயத்தில் சுவரோடு சுவராய்ச் சாய்ந்தாள். "ரிவால்வர்? நான் பார்த்தது கூட இல்லையே..."

பிரகாஷ் சுஜாதாவிடம் கேட்டான்: "ஸிஸ்டர், அந்த ரிவால்வரை எங்கே பார்த்ததாகச் சொன்னீர்கள்?"

"மேஜை டிராயரில்."

"இருக்கிறதா, பாருங்கள்!"

சுஜாதா மேஜையை நோக்கிப் புன்னகையோடு நடந்தாள். அதை அணுகி மேஜையின் டிராயரைப் பற்றி இலேசாக இழுத்தாள். உள்ளே ரிவால்வர் சிரித்தது.

"இருக்கிறது, ஸார்..." சுஜாதா சொன்னாள்.

"என்ன சொல்கிறீர்கள் மிஸஸ் சியாமளா..." சியாமளா மேஜைக்கருகே ஓடினாள். பார்த்தாள். உடம்பு முழுதும் குப்பென்று வியர்த்தது.

"மிஸ்டர் கோகுல்நாத், அரெஸ்ட் ஹெர்" கோகுல்நாத் கை விலங்கோடு நகர்ந்தார். சட்டென்று விலங்கை மாட்டினார் சுஜாதாவின் கரங்களில்.

"ஸார்... நான் சுஜாதா!..." சுஜாதா அலறினாள். பிரகாஷ் அவளை — அவள் அலறலைப் பொருட்படுத்தாமல் சொன்னான்: "நீ சுஜாதா என்று தெரிந்துதான் விலங்கை மாட்டியிருக்கிறார் இன்ஸ்பெக்டர்! கொஞ்சமும் சந்தேகம் வேண்டாம்."

---



லண்டனில் வெளியாகும் 'டிட்பிட்ஸ்' பத்திரிகை தபாலில் சந்தா வாங்கிக் கொண்டு யாருக்கும் அனுப்பப்படுவதில்லை. யாராக இருந்தாலும் கடையில் போய்த்தான் வாங்கிக் கொள்ளவேண்டும்.

டிட்பிட்ஸ் - பாலி

மூட்டுப் பிடிப்பா?



# ஆற்றுவது அயொடெக்ஸ்

## தேய்த்து ஆற்றும் நிவாரணம்.

வலி தணிக்கும் களிம்புகள் பல இருக்கலாம்; ஆனால் வலி தணித்து அதே சமயம் ஆற்றிவிடுவது அயொடெக்ஸ். ஆற்றக் காரணம் அதில் உள்ள அயொடின்.

தசை வலிக்கும் சரி, மூட்டு நோவுக்கும் சரி,— ஆற்றும் களிம்பு ஒன்றுதான் : அயொடெக்ஸ்.




**போடுவீர் அயொடெக்ஸ், புறப்படுவீர் ஓடியாட.**

IODEX-4-140 TM

நிரந்தர
வண்ணம்,
வழங்கும் எழில்
திண்ணம்!






## அப்கோலைட் சூப்பர்அக்ரிலிக் எமல்ஷன்

### அழகிய இல்லங்களுக்கு அருமையான பாதுகாப்பு




- எப்போதும் மாறாத வண்ணம்: மாக்பெத் விளக்குகளினுல் நிரூபணம் பெற்ற வண்ணம்.
- உயர்வான தரம்: 50க்கும் மேற்பட்ட பரிசோதனைகளினுல் நிரூபணம் பெற்றது.
- சீரான நயம்: அழகிய, சீரான மாட் ஃபினிஷுக்கேற்றது.

அப்கோலைட் ஸிந்தெடிக் எனமல் மரம் மற்றும் உலோகப் பரப்புகளுக்கு மிகச் சிறந்த பாதுகாப்பளிக்க; மிக அதிக விற்பனையாகும் எனமல்.



ஏஷியன் பெயிண்ட்ஸ்

CMAP-5-183 tam

பெருங் குரலெடுத்துக் கீச்சென்று கத்தினாள் சுஜாதா. ''என்னை எதற்காகக் கைது செய்கிறீர்கள்? நான் என்ன செய்தேன்?'' — முகம் செம்பருத்தியாய்ச் சிவந்திருந்தது.

''டாக்டர் மார்த்தாண்டத்தைத் துப்பாக்கிக் குண்டுகளால் துளைத்துவிட்டு என்னமாய் வேஷம் போட்டிருக்கிறாய்... ஐ மீன் பக மாதிரி!''

''நானா டாக்டரைக் கொலை செய்தேன்?... நோ.... நோ...'' — வீடு அதிரக் கத்தினாள் சுஜாதா. பின்புறமாய் நகர்ந்தாள்.

பிரகாஷ் சோபா-கம்-பெட்டின் தலைமேல் ஏறி அமர்ந்து நிதானமான குரலில் சொல்ல ஆரம்பித்தான்.

''சுஜாதா! அழகான பெயர்தான்! நீயும் அழகுதான். அதனால்தான் அழகாகத் திட்டமிட்டு டாக்டரை முடித்திருக்கிறாய். யூ ஹேவ் டன் எ நைஸ் மர்டர். கொலை செய்யும் படலத்தை அழகாகக் கதாகாலட்சேபம் செய்த நீ நடுவில் சில இடங்களில் தடுமாறியிருக்கிறாய். உன்னைப் பற்றி நான் சொல்லப்போகும் இந்தத் தகவல்களைத் திரட்ட எனக்குச் செலவானவை ஒரு வார காலமும், இருநூற்றிச் சொச்ச ரூபாயும். நான் சொல்லப் போவதை உன்னால் கண்டிப்பாக மறுக்க முடியாது.

''சுஜாதா! ஆறு மாதங்களுக்கு முன்னால் ஆறுமுகம் என்ற பேஷன்ட் குட்ஹெல்த் நர்ஸிங் ஹோமில் வயிற்று வலிக்காக வந்து தங்கியபோது சரியான மருந்தைக் கொடுப்பதற்குப் பதிலாகத் தவறுதலாக வேறு மருந்தைக் கொடுத்து விட்டாய். பலன்? ஆறுமுகம் ஒரு மணி நேரத்தில் செத்தான். நீ மருந்து கொடுத்ததை அட்டெண்டர் கண்ணுசாமி பார்த்துவிட்டான். டாக்டர் மார்த்தாண்டம் வந்து ஆறுமுகத்தைப் பார்த்துவிட்டு உனக்கு ஆறுதல் சொன்னார். விஷயத்தை மூடி மறைப்பதில் கண்ணுசாமியும் உடன்பட்டான். ஒரு வழியாக ஆறுமுகத்தை உறவினர்களிடம் கொடுத்த பின் டாக்டர் உன்னை நச்சரிக்க ஆரம்பித்தார். டாக்டர் பெண்கள் விஷயத்தில் ரொம்பவும் 'வீக்'. நீ சில சமயம் உடன்பட்டாய். சில சமயம் எதிர்த்தாய். நீ எதிர்த்தபோதெல்லாம் போலீஸைக் காட்டினார் டாக்டர்.

''ஆகவே, இந்தத் தொல்லையிலிருந்து நிரந்தரமாக விடுபட—நீ டாக்டரைத் தீர்த்துக்கட்ட விரும்பினாய். சம்பவம் நடந்த அன்று மாலை ஏழு மணிக்கு டாக்டர் வீட்டுக்கு வந்திருக்கிறாய். அவரைச் சந்தோஷப்படுத்தியிருக்கிறாய். எட்டு மணிக்கு மேல் அவருடைய ரிவால்வரினாலேயே அவர் கழுத்தைச் சல்லடையாக்கி விட்டிருக்கிறாய். டாக்டர் சரிந்த பிறகுதான் உனக்கு போலீஸ் என்று ஒன்று இருப்பதாக உறைத்திருக்கிறது. திட்டமிட ஆரம்பித்தாய். அந்தச் சமயத்தில் உன்னுடைய 'மிமிக்ரி' திறமை உன் உதவிக்கு வந்திருக்கிறது. டாக்டர் மார்த்தாண்டத்தின் கரகரப்புக் குரலில் என்னுடன் டெலிபோனில் பேசினாய். பிளாக் மெயில் நாடகம் போட்டாய். டாக்டர் ஏதோ பிளாக்மெயில் விவகாரத்தில் சிக்கியிருப்பது போலவும், வந்தவன் டாக்டரைத் தீர்த்து விட்டுப் போனதாகவும் நான் நினைக்க வேண்டும் என்று நீ எதிர்பார்த்தாய். நானும் நம்பினேன். உன்னுடைய 'மிமிக்ரி' திறமையை என்னால் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. கொலையின் நிழல் கூடத் தன் மீது விழக் கூடாது என்பதில் மிகுந்த எச்சரிக்கை காட்டினாய். நிழலைச் சியாமளாவின் பக்கமாய்த் திருப்பிவிட முயன்றாய். டாக்டரின் பர்ஸில் இருந்த சியாமளாவின் போட்டோ உனக்கு உதவியது. போட்டோவை உருவிப் பேப்பர் வெயிட்டுக்குக் கீழ் வைத்துவிட்டுக் கைபட்ட இடத்தைத் துடைத்தாய். பின் சாதுவாக நழுவிவிட்டாய்.

''உன் . போதாத காலம் என்றுதான் சொல்ல வேண்டும். தன் பள்ளி ஆண்டு விழாவுக்காக அழைப்பிதழ் கொடுக்க வந்த ரமாவோடு — உன் ஹாஸ்டலுக்கு எதிரே இருக்கும் சாம்பசிவம் மகள் உஷா ராணியும் வரவேண்டுமா? வந்தவள் தன் 'மிமிக்ரி' திறமையை என்னிடம் காட்ட வேண்டுமா? திறமையைக் காட்டியவளை அன்று மாலை விசாரித்தபோது நீதான் அவளுக்குக் 'குரு' என்பதைச் சொல்ல வேண்டுமா? மேற்கொண்டு அவளை விசாரித்தபோது உன்னை அடிக்கடி தேடிக் கொண்டு வரும் அட்டெண்டர் கண்ணுசாமியைப் பற்றிச் சொல்ல, அவனை விசாரிக்க — விஷயங்கள் மளமளவென்று விழ.....

''நடுவில் நீ இத்தனை அவசரப்பட்டிருக்க வேண்டாம். சியாமளாவை எப்படியாவது கொலைப் பழியில் மாட்டி வைக்க வேகமாக முயன்றாய். உன் சிநேகிதி சாந்தினியின் உதவியோடு இன்றைக்குக் காலை ரிவால்வரில் சேற்றைப் பூசிக் கொண்டு சியாமளாவின் வீட்டுக்குள் நுழைந்து, சியாமளா உள்ளே நகர்ந்த நேரம் மேஜை டிராயரில் ரிவால்வரைப் போட்டுவிட்டுச் சியாமளா கொடுத்த காப்பியைக் குடித்துவிட்டு வெளியே வந்தாய். உன் சிநேகிதியை அனுப்பிவிட்டு டெலிபோன் பூத்துக்குள் நுழைந்தாய். என்னைக் கூப்பிட்டாய். ஜீப்போடு வந்தோம். நீ ஏறிக் கொண்டாய். இப்போது... இப்போது...''

பிரகாஷ் சொல்லச் சொல்ல—

சுஜாதா மயக்கமாய் — அந்தக் கவரோராமாய் — மல்லிகைச் சரமாய்ச் சரிந்தாள்.

**மர்மச் சிறுகதைப் போட்டி முடிவு**

முதல் பரிசு: ரூ. 250/-

**இரவில் கேட்ட இரவல் குரல்**

கார்த்திகா

இரண்டாம் பரிசு: ரூ. 150/-

**கொல்லாமல் விடமாட்டேன்!**

கே. எஸ். வாசன்

மூன்றும் பரிசுகள்: தலைக்கு ரூ. 100/-

**விசித்திர உறவுகள்**

சுபா

**நன்றி, ராஜகோபால் நன்றி!**

எஸ். ஆர். சீனிவாசன்

# எனக்குத் தெரியுமே நம்பகமானது க்ளைகோடின்–

**பாழும் இருமல் இவரை விரைவில் விட்டகல...**



## இந்தியாவின் வேறெந்த இருமல் மருந்தையும் விட அதிக அளவிலே இருமலை நிறுத்தியுள்ளது க்ளைகோடின்.




## எனவேதான் அது முதல்தரமானது.

இருமல் பாதித்த எல்லா உறுப்புகளிலும் அது விரைந்து செயல்பட்டுத் தவறாமல் துரிதமான ஆறுதல் அளிக்கிறது.

- தொண்டைக் கமறலுக்கு இதமளிக்கிறது.
- ஜலதோஷத்தோடு வரும் இருமலை விலக்கிச் சளியடைப்பைத் தளர்த்துகிறது.
- நிம்மதியான உறக்கத்தைத் தூண்டி, மார்புத் தசைகளை இளைப்பாற்றி மூச்சு விடுதலை எளிதாக்குகிறது.

**எவ்வித இருமலையும் முழுதும் கட்டுப்படுத்த உறுதுணை க்ளைகோடின்.**




க்ளைகோடின்—இந்தியாவில், இருமலை முறியடிக்கும் சேம்பியன்—நம்பகமான மருந்துகளை நமக்குத் தரும் அலெம்பிக் நிறுவனத்திடமிருந்து.

# சொல்லும் வில்லும்

எஸ்.வி.கே





"இப்பத்தான் வருஷம் ஆரம்பித்த மாதிரி இருக்கு. அதுக்குள்ளே டிசம்பர் முடியப் போகிறது. காலம் என்ன வேகமாய்ப் போகிறது." இம்மாதிரி அநேக விஷயங்களில் காலத்தின் வேகத்தை உணர முடிகிறது. சங்கீதமும் அதற்கு விலக்கில்லை. இம்மாதிரி காலத்தின் சுழலில் சிக்குண்டிருக்கும்போது ஒரு காலப் பிரமாணத்தைத் தன் கையில் இடுக்கி, "இந்தக் கதியில்தான் நீ செல்ல வேண்டும், இந்த வேகத்தில்தான் நீ நகர வேண்டும்" என்று சொல்லக்கூடிய யோக்கியதை பெற்றிருந்தால், அவரை வாயாரப் போற்றி அவர் திறமையைச் சிலாகிக்க வேண்டியது அவசியம்.

இந்தக் கைங்கரியத்தைத்தான் இந்தியன் பைன் ஆர்ட் சொஸைட்டியார் மேற்கொண்டுள்ளனர். தொட் வேகத்தில் பாவ, ராக, தாளங்கள் ஆட்டுவிக்கப்படும் சங்கீத உலகத்தில், நின்று நிதானமாய், அக்ஷரம் அக்ஷரமாய்ச் சுவைத்து, ஸ்வரம்ஸ்வரமாய்க்கார்வை கொடுத்து, லயித்து, ஸாஹித்தியத்தின் கருத்துக்களைப் பல கோணங்களிலிருந்து அனுபவித்து, "இதோ, பைரவியின் ஜீவ களை, இதோ, ஸஹானாவின் உயிர் நாடி, இதோ மத்தியமாவதியின் ஸௌக்கியம்" என்று விண்டு, விவரித்து, 'சாந்தமுலேகா ஸௌக்கியமுலேது" என்று தியாகையர் வாழ்க்கைக்கு இலக்கணம் வகுத்துக் கொடுத்ததை ஸங்கீதத்தில் பொருத்தி அமைத்து ரஸிகர்களின் உள்ளங்களில் அமைதியை நிலவவிடும் எம். டி. ராமநாதனைப் பட்டம் கொடுத்துக் கௌரவிப்பது சந்தோஷப்பட வேண்டிய விஷயம்.

எம். டி. ராமநாதன் என்ற பெயர் சொன்னால் அவர் குரு டைகர் வரதாச்சாரியாரின் மேதாவிலாஸம் பளிச்சிடுகிறது. ஒருவிதத்தில் பார்த்தால் இது ஸ்ரீ ராமநாதனுக்கு ஒரு தர்மசங்கடமான நிலை. இவரைப் பற்றிச் சொல்ல நினைத்தாலோ, அவரை அறியாமலே பேசுபவரோ, எழுதுபவரோ 'டைகரின்' பாட்டைச் சிலாகித்து எவ்வளவு பேசினாலும் 'அவரின் பாட்டை அளவிட முடியாது' என்ற குறை மனத்தோடு முடிக்கத் தோன்றி விடுகிறது. இதில் ஸ்ரீ ராமநாதனின் பங்கு குருவின் பாட்டில் ஐக்கியமாகி விடுகிறது. ஆனால் ஸ்ரீ ராமநாதன் பெரும் அதிர்ஷ்டக்காரர். சிஷ்யன் பாட்டைக் கேட்டுக்குருவின் பாட்டை நினைத்து ரசிகர்கள் அசை போடச் செய்யக்கூடிய பாக்கியம் பெற்றிருக்கிறார். இதை உணர்ந்தே அவர் முந்நூறுக்குமேற்பட்ட தமது கீர்த்தனங்களுக்கு "வரததாஸன்" என்று முத்திரை விட்டிருக்கிறார். பாட்டில்லை நினைத்து ஆழ் கடல் போன்ற டைகரின் ஸங்கீத பொக்கிஷத்தில் மூழ்கி நல்முத்துக்களாக எடுத்து, நல்ல கர்நாடக ஸங்கீத ஹாரமாகச் செய்திருக்கிறார், ராமநாதன். சேவை செய்யும் இடமோ கலா க்ஷேத்திரம். க்ஷேத்திரத்திலேயே நாதப் பிரம்மத்தை உபாஸனை செய்தால் எது உயர்வான ஸங்கீதம், எப்படிப் பாடினால் பாடுபவரையும், கேட்பவர்களையும் மோக்ஷத்தின் வாயிலில் நிறுத்தி இதுதான் சங்கீதத்தின் இருப்பிடம் என்று காட்டுவது சிரமமான காரியமா ? சங்கீதம் பாடுபவரின் திறமையை மட்டும் பொறுத்ததல்ல. அதைப் போஷிக்கும் பக்குவத்திலும் இருக்கிறது. ஸ்ரீ எம். டி. ராமநாதனை மேன்மையும், கௌரவங்களும் தேடிக் கொண்டு வருகின்றனவென்றால் அவர் இசையின் மூலம் 'ஸௌக்கியம்' வாழ்க்கையிலும் ஸங்கீதத்திலும் எங்கிருக்கிறது என்று உணர்த்துவதனால்தான். எதிலுமே அவருக்கு அவசரம் கிடையாது. கச்சேரியில் தலை முடிவதிலிருந்து தியாகையர், வால்மீகி, ஸ்வாதித்திருநாள் எல்லோரையும் சேர்த்து ஸர்வ மங்களம் பாடும் வரையில்.

கம்பீரமான, அமுத்தமான அவர் பாட்டைக் கேட்பவர்களுக்கு ஆனந்தமாய்த்தான் இருக்கிறது. ஆனால் பக்கவாத்தியக்காரர்களுக்குக் கொஞ்சம் சிரமம்தான். காலப் பிரமாணத்தினால் அல்ல. அவருக்குப் பக்கவாத்தியம் வாசிப்பவர்கள் நல்ல திறமை உள்ளவர்கள்தான். அவர் தக்கு கருதியினால் தான் பக்கவாத்தியக்காரர்கள் கொஞ்சம் சிரமப்பட வேண்டியிருக்கிறது. அவரைக் குறை சொல்ல முடியாது. அவர் குரலின் இயற்கையான இயல்பு. ஒரு கச்சேரியை அணு அணுவாகப் பிய்த்துப் பார்க்கக்கூடாது. 'Total effect' என்று ஆங்கிலத்தில் சொல்கிறார்களே, அந்த அளவுகோலில் பார்க்க வேண்டும். அப்படிப் பார்த்தால் பக்கவாத்தியக்காரர்களின் சிரமமோ, கஜ நடையில் போகும்

அவர் சங்கீதமோ குறை உள்ளதாகவே தோன்றுகிறதில்லை.

காலத்தின் வேகத்தினால் ஜனங்கள் தலை சுழலச் செய்வது ஓர் அம்சம். காலத்தின் வேகத்தில் பல அரிய விஷயங்கள் பின்தங்கிப் போய்க் கவனிக்கப்படாமல் இருப்பது மற்றோர் அம்சம். இந்த இரண்டாவது அம்சத்தை எதிர்த்து நிற்பதும் போற்றப்பட வேண்டியது தான். இந்தப் பணியைத்தான் தமிழ் இசைச் சங்கத்தினர் மேற்கொண்டுள்ளனர். அறுபது வயதைத் தாண்டிய பிடில் வித்துவான் மாயூரம் கோவிந்தராஜப் பிள்ளையைக் கௌரவிப்பதைத்தான் சொல்லுகிறேன். கொஞ்ச காலமாக ஸ்ரீ கோவிந்தராஜப் பிள்ளை பக்க வாத்தியம் வாசிப்பதில்லை. அப்படித் தாமாகவே தம்மை மறைத்துக் கொண்டாலும் 'நாங்கள் விடமாட்டோம்' என்று தமிழிசை நிர்வாகிகள் அவரை மேடை மேல் ஏற வைத்துவிட்டனர்.

ஸ்ரீ ராமநாதனைப் போல் ஸ்ரீ கோவிந்தராஜப் பிள்ளை குருவைப் பெற்றதில் பெரும் பாக்கியசாலி. இருபது, முப்பது வருஷங்களுக்கு முன்னால் ஆஜானுபாகுவாக, சிரித்த முகத்துடன் ராஜமாணிக்கம்பிள்ளை பக்க வாத்தியம் வாசிப்பதைக் கேட்டிருந்தால் ஆண்டாள் கண்ணனை ''சார்ங்கமுதைத்த சர மழை போல்'' என்று விவரித்தது மனத்துக்கு வரும். சர மழை என்பதற்குப் பதிலாக ஸ்வர மழைபோல் என்று பொருத்திக் கொள்ளலாம். அப்படிப்பட்ட பாணியைப் பின்பற்றி ஸ்ரீ கோவிந்தராஜப்பிள்ளையும் பக்க வாத்தியத்தின் பொருளை உணர்ந்து வாசித்ததை எவ்வளவோபேர்கள் கேட்டிருக்கிறோம். ஸ்ரீ மதுரை மணி அய்யரும், ஸ்ரீ கோவிந்தராஜப்பிள்ளையும் மாற்றி மாற்றி, அடுக்கு, தாட்டு, ஜண்டை ஸ்வரங்களை சவால்—ஜவாப் முறையில் பாடி, வாசித்து ஜனங்களைக் கிளுகிளுக்கச் செய்ததை நினைத்தால் இன்றும் மயிர்க்கூச்செறிகிறது. ஒரு ராகத்தின் களையை இரண்டு, மூன்று வில்லின் வீச்சிலேயே தெளிவுபடுத்தி, பெண்களின் வைரத் தோடுகள் அப்படி இப்படி முகத்தைத் திருப்பும் போது ஜ்வலிப்பை அள்ளி வீசுவதுபோல், ஒவ்வொரு மேல் கால ஸங்கதியிலும் ஜ்வலிப்பைத் தீட்டி வழங்குவது ராஜமாணிக்கம், கோவிந்தராஜப் பிள்ளையின் பிரத்தியேக வயலின் பாணி. கார்வையிலும் ஸங்கதிகளிலும் சிறிசு, பெரிசு (இப்பொழுது வாய்ப்பாட்டிலும் சிறிது பெரிது காண்பது துர்லபமாகிக் கொண்டு வருகிறது.) காண்பித்து, கீர்த்தனைகளின் அடிப்படையில் ராகத்தில் ஸங்கதிகளைப் பக்குவமாயும், பொருத்தமாயும் கோத்துப் பின்னி, ''த்லோ, த்லோ, த்லோ' என்று தம்மையும் மறந்து கேட்பவர் இன்பத்தை வெளிப்படுத்தச் செய்யும் பாணி. ஸோலோ வாசிக்கும்பொழுது கீர்த்தனைகளை வாசிப்பதில் வாக்கேயக்காரர்கள் நிர்ணயித்த காலப்பிரமாணம், சுத்தமான வாசிப்பு ; பட்டுக் கத்திரித்தாற்போல் அளவான ஸங்கதிகள், தொட்ட இடத்திலெல்லாம் சம்பிரதாயம். இவ்வளவும் பொருந்தியிருந்து விட்டால் வயலின் வாசிப்பின் மேன்மையைச் சொல்ல வேண்டுமா ?

ஸ்ரீ கோவிந்தராஜப்பிள்ளை திருவனந்தபுரம் ஆஸ்தான வித்துவானாக முன்பே கௌரவிக்கப்பட்டிருக்கிறார். அண்ணாமலை பல்கலைக் கழகத்திலும் பணியாற்றியிருக்கிறார். தமிழக ஸங்கீத நாடக அகாதமியினால் 'கலை மாமணி' என்ற விருது கொடுக்கப்பட்டவர். அவர் ஸங்கீதத்தின் ஆழ்ந்த அனுபவம் விழாவின் பண் ஆராய்ச்சிக்கு மிகவும் உபயோகம் உள்ளதாக இருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

---



## எல்லார்வி மணிவிழா !

பிரபல எழுத்தாளர் 'எல்லார்வி' மணிவிழாவில் அவரிடம் விழாக் குழுவினர் ரூ. 37 ஆயிரம் பண முடிப்பு அளித்தார்கள்.

'எல்லார்வி' மணிவிழா சமீபத்தில் ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் நடந்தது. நீதிபதி பி. ஆர். கோகுலகிருஷ்ணன் தலைமை வகித்தார். முன்னாள் நீதிபதி என். கிருஷ்ணசாமி ரெட்டியார் சிறப்பு மலரை வெளியிட்டார். திருமுருக கிருபானந்த வாரியார் முதல் பிரதியைப் பெற்றுக் கொண்டார்.

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு கருப்பையா மூப்பனார் பொன்னாடை போர்த்தினார். திரு ஜி. பூவராகன் எம்.பி. பொற்கிழியை அளித்தார்.

திருமதி வசுமதி ராமசாமி, திரு அகிலன், திரு கே. ராஜேந்திரன், திரு எஸ். வி. சகஸ்ரநாமம் ஆகியோர் பாராட்டிப் பேசினர். திரு கி. வா. ஜகந்நாதன் வாழ்த்தினார். திரு கருப்பையா நன்றி கூறினார்.





# இசைக்கு மூன்று எளிய வழிமுறைகள் !

## செலவோ குறைவு

அதன் விலையை நோக்கும்போது புதிய எச்எம்வி ஃபியஸ்டா பாப்புலர் நிச்சயமாக மிகவும் சகாயமானது. நீடித்த உழைப்பிற்கேற்ப உறுதியும், திடமும் உடையது. கண்கவரும் இரு வண்ணக் காபினெட் கொண்டது. வசதிக்கேற்ப வாங்கி வாழ்நாள் முழுதும் இசைகேட்டு மகிழ வழியுண்டு.

## செவிக்கோ இனிமை

உள்ளேயிருக்கும் ஆம்பிளிஃபையர் மூலம் செவிக்கினிய சிறந்த ஒலியைப் பெறலாம். நீங்கள் விரும்பும் நிலையில் அமைத்துக் கொள்ள மூடியிட்ட ஒலிபெருக்கி.

## இசைத்தட்டிற்கோ மென்மை

இலேசான டோன்-ஆர்ம், ஊசிக்கும், இசைத்தட்டிற்கும் இதமாக இருப்பதால் தேய்மானத்தை மிகவும் குறைக்கிறது. எளிதாக மாற்றக் கூடிய ஊசி.

புதியது!
எச்எம்வி

# ஃபியஸ்டா பாப்புலர்

ரிக்கார்டு ப்ளேயர்.
ஏஸி மெயின்களுக்கும்,
பாட்டரிகளுக்கும் ஏற்றது.

**ரூபாய் 475 மட்டுமே.**

சிபாரிசு செய்யப்பட்ட அதிகபட்ச விலை எக்ஸைஸ் வரி உட்பட்டது. உள்ளூர் வரிகள் தனி.

GC.8873

**சகாயமான விலையில் விரும்பிய இசை கேட்கலாம்**




**ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்**
ஒலிமயமான எதிர்காலம்

சிறப்பாக இயங்கும் எவரெடி சூப்பர் 99 பாட்டரி உபயோகியுங்கள்






# பெண்மணி



நாட்டு நலன் காக்கும் நல்லவர்களை ஈன்றெடுப்பதால் நாட்டுப் பெண் என்று சொன்னார்கள்.

மாடுபோல் உழைப்பதால், மாட்டுப் பெண் என்று சொன்னார்கள்.

மங்காத புகழுக்கு அஸ்திவாரமாய் இருப்பதால், மங்கை என்று சொன்னார்கள்.

நற்குணங்கள் நிரம்பி விருப்பதால் நங்கை என்று சொன்னார்கள்.

நவமணிகள் போல் உயர்ந்திருப்பதால், பெண்ணோடு மணியைச் சேர்த்துப் பெண்மணி என்று சொன்னார்கள்.

இல்லத்தில் நல்லாட்சி செய்வதால்; இல்லத்தரசி என்று சொன்னார்கள்.

குடும்பத்தில் ஏற்படும் கிழிசல்களைத் தைத்துவிடுவதால், தையல் என்று சொன்னார்கள்.

பாவிகளுக்கும் இரக்கம் காட்டுவதால், பாவை என்று சொன்னார்கள்.

—வர்ணம்



## சில விஷயங்கள்...

- உப்பையும் சர்க்கரையும் உணவில் குறைவாகச் சேர்த்துக் கொண்டு வந்தால் தலைமுடி கொட்டாது.
- சோக நோய் உள்ள பெண்கள் தங்கள் உணவில் பசலைக்கீரையை சேர்த்துக் கொள்ள வேண்டும். பசலைக்கீரையில் சுண்ணாம்பு சத்தும் இரும்புச் சத்தும் அதிகம்.
- ஒரு டம்ளர் வெந்நீரில் பனங்கற்கண்டைப் போட்டுக் கலந்து கொடுத்தால் கர்ப்பமான பெண்களுக்குச் சிறுநீர் சுலபமாகப் பிரியும்.
- டேபிள் சால்ட்டையும் சோடா உப்பையும் சம அளவு கலந்து இரவில் படுக்கப் போகுமுன்பு பல்லிலும் பல் ஈறுகளிலும் வைத்துத் தேய்த்தால் ஈறுகள் வலுப்படுவதோடு பற்களும் நன்ருக இருக்கும்.
- வெங்காய சாம்பாரில் அதிக வெங்காய வாசனையை விரும்பினுல் குறைவான புளித் தண்ணீரில் வெங்காயத்தை மூடிய சின்னப் பாத்திரத்தில் வேக வைக்க வேண்டும். வாசனை 'கம கம' என்று மூக்கைத் துளைக்கும்.

- வி. லக்ஷ்மி

மேற்கு ஜெர்மனியில் உருவாக்கப்பட்ட இந்தக் கடிகாரம் சூரிய வெப்ப சக்தியின் மூலம் இயங்குகிறது. இந்தக் கடிகாரத்தின் உள்ளே பொருத்தப்பட்டிருக்கும் பாட்டரிகள் சூரிய வெப்பத்தைக் கிரகித்துச் சக்தி பெறுகின்றன. இந்தப் பாட்டரிகளின் மூலம் இயங்கும் இந்தக் கடிகாரம் நேரம் தேதி ஆகியவை மட்டுமின்றி வெப்ப நிலையையும் தெரிவிக்கிறது.

## சூரிய - கடிகாரம்



# சகல கலாவல்லி சித்ரா

கல்லூரிப் படிப்பை முடித்தவுடன் சித்ரா கொடைக்கானலில் தன் பெரியப்பா வீட்டில் ஒரு மாதமும், மதுரையில் உள்ள மாமா வீட்டில் ஒரு மாதமும் தங்கியிருந்து விட்டுச் சென்னைக்குத் திரும்பினாள்.

திரும்பியவுடன் பி. எஸ்ஸி. தேர்வில் இரண்டாம் வகுப்பில் பாஸ் பண்ணிய செய்தி கேட்டு மகிழ்ந்தாள். மேற்கொண்டு படிப்பதில் விருப்பம் இல்லை சித்ராவுக்கு. வேலைக்கு அனுப்பவோ வீட்டிலுள்ள பெரியோர்களுக்கு விருப்பம் இல்லை. ஆதலால் சித்ராவுக்குப் பொழுதுபோவதுசிரமமாக இருந்தது.

பக்கத்து வீட்டின் முன்புறம் ரம்மியமாகக் காட்சி அளித்த தோட்டத்தைப் பார்த்த சித்ராவுக்குத் தன் வீட்டின் முன் பக்கத்தில் உள்ள இடத்தில் தோட்டம் போட்டால் என்ன என்ற யோசனை தோன்றியது. அன்று மாலையே தன் தம்பி முரளியின் துணையுடன் செயல்படுத்த முனைந்தாள். கரடு முரடாகக் காட்சி அளித்த இடத்தைக் கொத்திச் சீர்ப்படுத்தினாள். 'நர்ஸரி'யில் அலைந்து வாங்கிய விதைகளைத் தூவினாள். நாள்தோறும் காலையிலும் மாலையிலும் புடவையைத் தூக்கிச் செருகிக் கொண்டு தலை முடி முகத்தில் நடனமாட அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் பார்ப்பதையும் பொருட்படுத்தாமல் தோட்ட வேலையில் ஈடுபட்டாள். தாவரங்கள் முளைத்து, இலைவிட்டு வளரத் தொடங்கின. அதைப் பார்க்கச் சித்ராவுக்குப் பெருமிதமாக இருந்தது.

வழக்கம்போல் ஒரு நாள் காலையில் தோட்டத்துக்குச் சென்ற சித்ராவுக்கு அழுகையே வந்துவிட்டது. அவள் ஆசையுடன் வளர்த்து வந்த செடி கொடிகளின் இலைகளை அவள் வீட்டுக் கோழிகள் கொத்தித் தின்றுவிட்டன. அதைப் பார்த்த சித்ரா இனி தோட்டமே போடுவதில்லை என்று தீர்மானம் செய்து கொண்டாள்.

பத்திரிகையில் வெளியான கதை ஒன்றைப் படித்த சித்ரா அக்கதைக்காக வரையப்பட்ட ஓவியத்தைக் கண்டு தானும் இவ்வாறு ஓவியங்கள் வரைந்தால் என்ன என்று எண்ணினாள். வீட்டிலுள்ள எல்லாப் பத்திரிகைகளிலும் உள்ள ஓவியங்களையும்வெட்டி எடுத்து அது போன்று வரையத் தொடங்கினாள்.

சித்ராவின் அண்ணன் குமார், 'ஆர்டிஸ்ட் சித்ராவிடம் ஓவியம் பயில வாயிலில் நிறைய பேர் வந்து காத்திருக்கிறார்கள்' என்று கேலி செய்தான். குமார் 'தோட்டக் கலை போய் ஓவியக் கலையில் ஈடுபட்டுள்ளாள். இது எவ்வளவு நாட்களுக்கோ?' என்று மனத்துக்குள் எண்ணினான்.

அவன் எண்ணியபடியே சித்ராவுக்கு ஓரிரு நாட்களிலேயே ஓவியம் வரைவது 'போர்' அடிக்கத் தொடங்கியது. அதனால் அதனை விட்டுச் சமையற்கலை புத்தகங்களைப் படித்து அதில் உள்ள புதிய முறைகளைப் பின்பற்றிச் சமையல் செய்யத் தொடங்கினாள். அவை தீய்ந்தும் கருகியும் வந்தன. அரைக் கிலோ நெய்யும், மைதாவும் வீணானதுதான் கண்ட பலன். அது முதல் அவள் தாய் சித்ராவைச் சமையல் பரிசோதனை செய்ய விடுவதில்லை.

தன் கற்பனையில் உதித்த கதைகளைப் பத்திரிகைகளுக்கு எழுதத் தொடங்கினாள் சித்ரா. ஒன்றும் வெளிவராததால் எழுதுவதை நிறுத்தினாள், பொறுமையற்ற நம் நாயகி. இந்நிலையில் அவளுடைய தந்தை தையல் மெஷின் வாங்கி வந்து தையல் பழகும்படி சொன்னார்.

சித்ராவும் உற்சாகமாகத் தைக்கத் தொடங்கினாள். தையல் வகுப்புக்கும் சென்று வரத் தொடங்கினாள். இவ்வாறு ஒரு மாதம் சென்றது. அவள் பொறுமையுடன் வகுப்புக்குப் போய் வருவது வீட்டில் உள்ள அனைவருக்கும் ஆச்சரியமாக இருந்தது. ஆனால் என்ன துரதிர்ஷ்டம்! சித்ரா சென்று வந்த இடத்தில் தையல் சொல்லிக் கொடுப்பதை நிறுத்தி விட்டனர். வேறு இடத்தில் சேருவது சித்ராவுக்கு அலுப்பாக இருந்தது.

இவ்வாறிருக்கையில் சித்ராவின் திருமணம் நிச்சயிக்கப்பட்டது. திருமணம் நடைபெறச் சில நாட்களே இருந்தன. குமார் தங்கையிடம், "சித்ரா! நீ ஓவியக் கலை, தையற் கலை போன்றவற்றை அரைகுறையாகக் கற்றுப் பொறுமையின்மையால் விட்டு விட்டுப் பெருமைக்குச் சகலகலாவல்லியாக இருந்தாய். ஆனால் நீ ஈடுபடப் போகும் குடும்பக் கலையில் பொறுமையுடன் முழு மனத்துடன் ஒன்றிச் சிறப்புற நடத்த வேண்டும்" என்று அன்பு ததும்பச் சொன்னான். அதைக் கேட்டு மாஜி சகல கலாவல்லி சித்ரா பொறுப்பு உணர்ச்சியுடன் புன்னகை செய்தாள்.

குறிப்பு: வாழ்க்கையில் அனுபவித்து எழுதியது.

— க. சுமா பி.எஸ்ஸி



# திரும்பிப் பார்க்கிறேன்!

கல்லூரிக் கதை-10

ஜெயா பாலகிருஷ்ணன்





இன்றைக்கு இருபத்தெட்டு ஆண்டுகளுக்கு முன் கைரளீயக் கல்லூரியில் நான் ஒரு குட்டி ஆசிரியராகத் தடுக்கி விழுந்தேன். மாணவர்களுடன் வேண்டுமளவு மல்யுத்தம் செய்த பின், கைநிறையச் சம்பளம் தந்த சர்க்கார் உத்தியோகத்தை நாடி வடக்கே ஓடினேன். ('நல்ல பேராசிரியர்' என்ற கியாதி வடக்கிலும் பரவப் போய், உள்ளூர் சர்வகலா சாலையில் 'பார்ட் டைம்' பேராசிரியராகப் பணியாற்ற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.) எட்டு வருஷங்களுக்குப் பின் சர்க்கார் உத்தியோகத்துக்குத் தலை முழுகி, தென்னாட்டுக் கல்லூரி ஒன்றில் முழு நேரப் பேராசிரியரானேன். இரண்டாம் முறை ஆசிரியர் வேலையை மேற்கொண்டு வகுப்புக்குள் நுழைந்தபோது, ஒரு புது உலகத்தில் கால் எடுத்து வைத்த பிரமை ஏற்பட்டது. அப்பப்பா! எவ்வளவு மாறுதல்கள்!

நான் வேலைக்குச் சேர்ந்த பொற்காலத்தில் (கற்காலமா?) ஆசிரியர்களையும், மாணவர்களையும் இனம் கண்டு கொள்வது எளிது. வயது வித்தியாசத்தினால் அல்ல. 'கிராப்' வாத்தியார்கள் எல்லாம் 'சூட்' அணிந்திருப்பார்கள். முழு நீளம் 'டை' ஒவ்வொரு கழுத்திலும் தொங்கும். குடுமிப் பேராசிரியர்கள் கட்டாயம் தலைப்பாகையும், பஞ்சகச்சமும் அணிய வேண்டும் என்று எழுத்தில் வராத சட்டம் இருந்தது. மீசை தாடி சரியாக வளராத வித்துவான் ராமு சாஸ்திரி (வயது பதினெட்டுதான்!) தலைப்பாகை, பஞ்சகச்சத்துடன் வகுப்புக்குப் போகையில், கிரீன் ரூமிலிருந்து பாதி 'மேக்–அப்'பில் ஓடி வந்த அமீனா வேஷதாரியாட்டம் காட்சி அளிப்பார். அந்தப் பொல்லாத சைக்கிளின் பின்புறம் வழியாக அவர் எம்பி எம்பி ஏறுகையில் அந்தப் பஞ்சகச்சம் என்னமா தடுக்கும்?... இன்று யார் மாணவன், யார் வாத்தியார் என்று கண்டுபிடிப்பதே பிரயாசையாகி விட்டதே! இளம் தலைமுறையைச் சேர்ந்த ஆசிரியர்களைக்கூட அல்லவா 'ஹிப்பித் தலை மோகம்' பிடித்து ஆட்டுகிறது?

மாணவர்கள்தான் என்னமா மாறிவிட்டார்கள்? கைரளீயக் கல்லூரியில் யூனிபாரம் 'நல்ல பையன்' குல்லாயுடன் வகுப்புக்கு வந்து கொண்டிருந்த மாணவர்கள் எங்கே, இந்தச் 'சீப்பில்லாத' பிள்ளைகள் எங்கே? வகுப்பு முழுதும் குறுந்தாடிகள்! வர்ண வர்ணச் சட்டைகள்! சோடா பாட்டில் கண்ணாடி, சந்தனப் பொட்டு முதலிய அலங்காரங்களுடன், முதல் பெஞ்சில் உட்கார்ந்து வாத்தியார் சொல்லுவதையெல்லாம் வேத வாக்காக எழுதிக் கொள்ளும் உத்தம சீடர்கள் எல்லாம் எங்கே? பக்கத்துக்குப் பக்கம் 'ஸ்ரீராமஜயம்', 'முருகன் துணை' என்று எழுதி நம் மனத்தில் பக்திக் கனலை வளர்த்துக் கொண்டிருந்த பிள்ளைகள் எப்படித் திடீரென்று தலைமறைவானார்கள்? மருந்துக்குக் கூட ஒரு குடுமி இல்லையே! அதோ ஒரு பிள்ளை வகுப்பிலேயே 'ஹெரால்ட் ராபின்ஸ்' படிக்கிறான். இன்னொருவன் இலக்கியச் சர்ச்சை என்று சொல்லி பம்பாய்ச் சாக்கடைகளை அடிப்படையாக வைத்து எழுதின உண்மைக் கதைகளை 'பால்ஸாக்' (Balzac) போன்ற மேதைகள் எழுதின நூல்களுடன் ஒப்பிட்டு நம்முடன் வாதாடுகிறான். அது மட்டுமா? மேலும் சில புத்தகங்களை நமக்குச்

பொரிக வேறு செய்கிறான்! அந்தக் காலத்தில் 'புதுமைப்பித்தன்' எழுதின 'காஞ்சனை'யைப் படித்ததற்காக ஒரு மாணவனை மூன்று நாள் 'சஸ்பெண்ட்' செய்தார் ஓர் ஆசிரியர். அந்தச் சின்னச் சம்பவம் கல்லூரியில் எவ்வளவு பரபரப்பை ஏற்படுத்தியது! அதைப் பற்றி எத்தனை வாதப் பிரதிவாதங்கள்!

காலம் மாறிவிட்டது. கலங்கிப் பயனில்லை. கால வெள்ளத்தைத் தடுத்து நிறுத்த யாரால் முடியும்? எதிர் நீச்சல் போடுவதைவிட, இன்றைய மாணவனின் சிறப்புக்களை (இவனுக்குப் பழைய காலத்து மாணவனைவிட எவ்வளவோ சிறப்புக்கள் இருக்கத்தான் செய்கின்றன. இவனது பொது அறிவும், விஞ்ஞான அறிவும் போதுமே இவனை இமயத்தின் உச்சியில் ஏற்றி வைக்க!) புரிந்து கொண்டு, இவனுடன் ஒன்றிப் போவதுதான் விவேகம். 'ஜெனரேஷன் காப்' என்பது நம்மால் இட்டு நிரப்ப முடியாத ஒரு பள்ளம். நான் மாணவனாக இருந்த காலத்தில் எங்கள் ஆசிரியர்களும் எங்களைப் பற்றி இப்படித்தான் ஆயிரம் குறைகள் கூறி வந்தார்கள்.... நாளைக்கும் இந்த நாடகம் தொடரத்தான் போகிறது!

இந்த நீண்ட காலப் பேராசிரியர் வாழ்க்கையில் நான் சொல்லும்படியாக எதுவும் சாதித்து விடவில்லைதான்! (மாணவர்களுக்கு இயற்கையாக இருக்கும் கொஞ்ச நஞ்சம் இலக்கிய ரசனையையும் என் 'லெக்சர்'கள் மூலம் குழி தோண்டிப் புதைத்தது பெரிய சாதனையா?) ஆனால் பிள்ளைகளுடன் கழித்த காலமெல்லாம் வீண் என்று நான் சொல்லத் தயாராயில்லை. அவர்களுக்குப் பாடம் கற்பிக்கையில் அவர்கள் வளர்ந்தார்களோ இல்லையோ, நான் வளரத்தான் செய்தேன். ஆங்கில பாஷையை அம்மானை ஆடச் சொல்லித் தந்தவர்களே, அவர்கள்தானே? வருடம் முழுதும் மாணவர் முன் 'பேச்சு ஒத்திகை' நடத்தினால் ஏன் சிறந்த மேடைப் பிரசங்கியாக முடியாது? என் சிந்தனா சக்தியும், அறிவாற்றலும் மழுங்கிப் போகாமல் காப்பாற்றுகிறவர்கள் என் மாணவர்கள்தாம். நாள்தோறும் புதுப் பாடங்களை நடத்த எத்தனை நூல்களைப் படிக்க வேண்டியிருக்கிறது? எத்தனை குறிப்பெடுக்கிறேன்? எல்லாவற்றுக்கும் மேலாக என் நகைச்சுவை உணர்ச்சி வலுப் பெறக் காரணமே வாலுப் பிள்ளைகள் தான். பிரின்ஸிபால் கல்லுப் பிள்ளையாராட்டம் வீற்றிருக்க, 'அவர் கொலை செய்யப்பட்டார்' என்று பொது டெலிபோன் மூலம் போலீசுக்குத் தகவல் தந்து, கல்லூரியில் பெரிய பரபரப்பை உண்டுபண்ணின போக்கிரியின் செயலை அன்று அனைவரும் கண்டித்தார்கள். திரும்பிப் பார்க்கையில் சிரிப்புத்தான் பீறிட்டுக் கொண்டு வருகிறது. ஏப்ரல் முதல் தேதியன்று 'டிராபிக் கான்ஸ்டபி'ளாட்டம் வேடமணிந்து தெருவில் ஓடிக் கொண்டிருந்த நூற்றுக்கணக்கான வாகனங்களை நீண்ட நேரம் நிறுத்தி வைத்த 'எமகாதகப் பிள்ளை'யைத்தான் எளிதில் மறக்க முடியுமா? இவர்கள் புதுப் புது விஷமங்கள் செய்யப் போய்த்தான் நான் நூற்றுக்கணக்கில் 'காலேஜ் கதைகள்' எழுதினேன்?

'காலேஜ் கதைகளை'ப் பற்றிக் குறிப்பிடுகையில் அந்தத் துரதிர்ஷ்டவசமான சம்பவத்தைச் சொல்லாமல் விடுவது சரியல்ல. என்னுடைய கற்பனைக் கதாபாத்திரங்களை எல்லாம் நிஜமானவர்கள் என்று எண்ணி ஒரு கல்லூரியைவிட்டு எனக்குத் திடீர் 'கல்தா' தந்தார்கள் நிர்வாகிகள். என் வாழ்க்கையில் நடந்த மிக முக்கியமான சம்பவங்களில் ஒன்றாயிற்றே அது?... நகைச்சுவை எழுத்தாளர்களே உஷார்! உங்கள் எழுத்துக்கு நிறைய எதிரிகள் இருக்கிறார்கள்!

ஆசிரியர் வேலையை மேற்கொண்டதற்காக நான் வருந்தவேமாட்டேன், என் மாணவமாணவிகள் என்னிடம் வைத்திருக்கும் மதிப்பை நினைத்துப் பார்த்தால்! ஏகலைவன் என்னமோ பிரமாதமாகக் கட்டை விரலைக் குருதட்சணையாகத் தந்ததாகச் சொல்லுகிறது கதை. என்னுடைய ஹிப்பித் தலை மாணவர்கள், மேல் எழுந்தவாரியாகப் பார்க்கையில் ஆழமான பற்றுதல்களோ உணர்ச்சிகளோ இல்லாதவர்கள் போல் தோன்றலாம். ஆனால் உண்மையில் ஒவ்வொருவனும் ஒரு மணிப் பிள்ளை.... 'ஜெம்'! சென்னை, தில்லி, கல்கத்தா என்று எந்த ஊருக்குச் சென்றாலும், எவனோ ஒருவன் திடீரென்று எழுந்து நின்று பஸ்ஸில் எனக்கு இடமளிப்பான். 'ஸார்! நான் உங்க மாணவன்' என்று சொல்லிக் குரு பக்தியுடன் அவன் பக்கத்தில் குழைந்து நிற்கையில் எனக்கு மெய் சிலிர்க்கும். அன்று கோவை பஸ் ஒன்றில் ஏழெட்டுப் பேர் திடு திப்பென்று எழுந்து நின்றார்கள். தலைமை ஆசிரியர் மகாநாடு முடிந்து திரும்புகிறவர்கள் அத்தனை பேரும் ஏதேதோ ஊரில் என்னிடம் பாடம் கேட்டவர்கள் (நான்தான் ஊர் ஊராகக் கூடாரம் அடித்துச் சரித்திரம் ஏற்படுத்தின 'சர்க்கஸ் பேராசிரிய'ராயிற்றே!) உலகத்தில் எந்த மூலைக்குச் சென்றாலும் என் மாணவன்



ஒருவன் நிச்சயம் கண்ணில் தென்படுவான் போலும் ('எஸ்கிமோ' நாடு உள்பட!) 'இண்டர் மீடியட்' வகுப்பில் மும்முறை குண்டடித்து ஊரைவிட்டு ஓடிப் போன முகம்மது ஷெரீப் குரு பக்தி காரணமாக நடு நிசியில் போலீஸ் யூனிபாரத்தில் என்னைத் தூரத்தப்போய்க் கௌஹாத்தி வீதியில் நான் கும்பிட்டு நின்றது மறந்தா போகும்? பாலம் விமான நிலையத்தில் பல உயரிய பட்டங்களுடன் வந்து இறங்கின பட்டாச்சார்யா பெற்றோர்களை எல்லாம் விட்டு விட்டு என்னிடம் ஓடி வந்து 'என் வெற்றிக்கெல்லாம் காரணம் நீங்கதான்' என்று உணர்ச்சிவசப்படக் குறிப்பிட்டது என் நெஞ்சத்தைவிட்டு அகலுமா?

ஆம்! பரந்து கிடக்கும் (பூகோள ஆசிரியர்கள் மன்னிக்கவும்!) இந்த உலகத்தில் எனக்கு எத்தனையோ 'பந்து'க்கள். மற்றவர்களைப் போல் முதிர்ந்த பிராயத்தில்கூடத் 'தனிமை' என்னை வாட்டாது!

# நல்ல பெண்மணி

ஒருத்தி நல்லவளாயிருப்பதற்கு எத்தனை கஷ்டப்பட வேண்டியிருக்கிறது! அக்காள், அவள் புருஷன், அவளது தம்பி — அவனை விதி வசத்தினால் மணந்த இரு மனைவிகள். இவர்களைச் சுற்றி ஒரு வேதனையான கதை படர்கிறது. இரு மனைவிகள் என்றால், சட்டத்திலிருந்து தப்ப ஒருத்தி சாக வேண்டும். இன்னொருத்தி வாழ வேண்டும். இந்தத் திரையுலக உத்தியைப் பின்பற்றி இறக்கும் முதல் மனைவியாக வருபவர் ஜெயா. வாழும் இரண்டாம் மனைவியாக வருபவர் ஸ்ரீ வித்யா. இடைவேளைக்குப்பின் ஜெயா வந்தாலும் தம் நடிப்பினால் மன நிறைவைத் தருகிறார். ஸ்ரீவித்யா கடலில் விழப்போய், பணக்கார வாலிபனுக்கு மனைவியாகிறாள். அது தான் அந்தப் பாத்திரத்தின் அதிர்ஷ்டம். ஆனால் அதற்குமேல் அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சியாக வந்து அவளை நிலை கலங்க வைக்கிறது. கடலில் விழப் போனதிலிருந்தே அந்தப் பாத்திரம் எழுந்து நின்று விட்டது. ஸ்ரீவித்யா அந்தப் பாத்திரத்துக்கு உயிர் கொடுத்துவிட்டார். எதிர்பாராமல் கைப் பற்றிய கணவனை முதல் இரவிலேயே விட்டு விலக நேர்ந்த காட்சியிலும், மூத்தாளை வாழ வைப்பதற்காகத் தன் உரிமையையே விட்டுக் கொடுத்தபோதும் ஸ்ரீவித்யா தம் நடிப்பைச் சிறிதும் விட்டுக் கொடுக்கவில்லை!

அக்காளிடம் கைகட்டி நின்று, இரு மனைவியர்களிடமும் அகப்பட்டுத் தவிக்கும் ஒரு நல்ல மனிதனாக வரும் முத்துராமன் தர்ம சங்கடமான நிலையில் இருக்கும் ஒரு மனிதனை நம் கண் முன்னால் கொண்டு வந்து நிறுத்துகிறார்.

மனைவி பேச்சுக்கு மறு பேச்சுப் பேசாத கணவனாக வந்து திரைக்கதையின் முக்கியமான திருப்பத்துக்குக் காரணமாயிருக்கிறார் மேஜர் சுந்தரராஜன்.

கதை, வசனம் ஜகதீசனுடையவை. வசனம் கருத்துள்ளது. ஏ. ஜகந்நாதன் சிக்கலான கதையை நன்கு டைரக்ட் செய்திருக்கிறார்.

சௌகார் ஜானகியும் ஒரு நல்ல பெண்மணிதான். நாலும் தெரிந்த அக்காளாக வந்து மிகவும் பதவிசாக நடித்துத் தம் நடிப்பாற்றலினால் நல்ல பெண்மணியை வாழ வைக்கிறார்.

தேங்காய் சீனிவாசன் இரு வேடங்களை ஏற்று நகைச்சுவைக் காட்சியைச் சிறப்பாக்குகிறார். அதில் மனோரமா, சச்சு இருவரும் அவருக்குத் துணையாக நிற்கின்றனர்.

சத்யா பிலிம்ஸின் ''நல்ல பெண்மணி'' தப்புத்தண்டா எதுவும் இல்லாத நல்ல பெண்மணிதான்!

— காந்தன்



# அன்றும் இன்றும்



நேற்று நிறுவப்பட்டது ஜோதி யூனிபிலட் பம்பு



இன்றே காணமுடிந்தது இன்ப நாள் இதுவே

முன்னேற்றத்தின் இரகசியம்—

# ஜோதி யூனிபிலட் பம்பு

வெற்றி மிகு ஜோடி



ஜோதி
யூனிபிலட்
பம்பு



ஜோதி
ஸ்டார்ட்டர்

ஆழ ஈர்ப்பு (டீப் ஸக்ஷன்) மூலம் செவ்வனே நீரிறைக்கும் திறன், அன்றாடப் பழுதுபார்ப்புத் தொல்லைக்குத் தீர்வு, மின்சாரச் செலவுகளிலே மிச்சம், நீடித்த ஆயுள்—இவை யாவும் ஜோதி யூனிபிலட் பம்புகளிலே கிடைக்கும் முக்கிய நன்மைகள். இக் காரணத்தினால் தான் ஜோதி பம்பு காப்பியடிக்கப் படுகிறது. ஜோதி ஆராய்ச்சி நிலையத்தின் ஓயாத முயற்சிகளின் பயனாக, எப்போதுமே விவசாயிகள் இந்தப் பம்பையே கோருகின்றனர்.



## ஜோதி லிமிடெட், பரோடா

● ஹைட்ராலிக்ஸ் ● எலக்ட்ரிகல்ஸ் ● பவர் எலக்ட்ரானிக்ஸ்

கிளை: எவர்லைன்ஸ் ஓட்டல், 177/179 மவுண்ட் ரோடு, சென்னை. போன் 850 07.
விற்பனையாளர்கள்: ஸி. வி. & கோ., xxx/613, மகாத்மா காந்தி ரோடு, கொச்சி 682 016
ஆட்டோமேட்டிக் பம்ப் ஸ்பெஷலிஸ்ட்ஸ், நம்பர் 4, பாண்டி பஜார், தி. நகர், சென்னை 600 017;
இலட்சுமி டிரேடர்ஸ், நம்பர் 2, எர்ரபாலு செட்டி ஸ்ட்ரீட், சென்னை 600 001; ராஜும் & கோ.,
61, சதி ரோடு, ஈரோடு; மேலக்கடை எலக்ட்ரிகல்ஸ், 215, மெயின் ரோடு,
பெண்ணாடம் 606 105; ஆகட் ஏஜன்ஸீஸ், நம்பர் 8, நியூ கொழும்பு ஸ்டோர்ஸ், மாயூரம்,
ப்ரீமியர் இண்டஸ்ட்ரீஸ், 80/81, செம்புதாஸ் ஸ்ட்ரீட், சென்னை 600 001;
முருகன் ஆட்டோமேட்டிக்ஸ், காளியம்மன் கோவில் ஸ்ட்ரீட், உசிலம்பட்டி

# உலகிலேயே முதன் முதலாக

# ப்ளீச் செய்யாமலே கருநிற மேனியை சிகப்பாக்கும் க்ரீம்




உலகு காணும் புதுமை: நிறத்தைக் கரைக்காமலே (ப்ளீச் செய்யாமலே) கரு மேனியைச் சிகப்பாக்கும் சாதனம் எக்காலத்திலும் இருந்ததில்லை. சருமத்தைச் சிவப்பாக்க இதுநாள்வரை செய்த முயற்சிகள் எல்லாமே குருட்டு முயற்சிகள், முரட்டு முறைகள். ப்ளீச்சுகளின் சங்கதி உங்களுக்குத் தெரியும்: இருக்கும் நிறத்தையும் கரைத்து வெளிற வைத்து விடும். அடிக்கடி உபயோகிப்பதோ ஆபத்து: காரணம், சருமத்தையே பாதிக்கும் அவற்றின் கடுங்குணம்.

விடிவெள்ளி காட்டும் விஞ்ஞான சாதனையாம் ஃபேர் அண்ட் லவ்லி இரு வழிகளில் வேலை செய்கிறது:

1. உள்ளூர வேலை செய்யும் வைட்டமின் ஒன்று அதிலுள்ளது.

இந்தக் க்ரீமை இடும்போதே, இதிலுள்ள வைட்டமின் சருமத்தினுள் இறங்குகிறது. இழைத்துத் தடவும் போதே உணருவீர்கள் இதன் செயல்-வேகத்தை; பரவும் சருமக் கருமையினை மெல்லத் திசைதிருப்புகிறது இது. வேளாவேளை ஆறு வாரங்கள் உபயோகித்துவந்தால் மேனி வண்ணம் மாறக் காண்பீர், பிறரும் காண்பார்.

2. வெளிப்புறத்திலிருந்து பாதுகாப்பதற்கு, சூரிய ஒளி படாதப்படி தடுக்கும் சாதனம் அடங்கியுள்ளது.

நிறம் கருப்பதற்குக் காரணமான கதிரொளியை சருமத்தின் மீது படவிடாமல் தடுத்து விலக்கி, மேனியைக் காத்திடுகிறது ஃபேர் அண்ட் லவ்லி.

சிகப்பூறு தந்து, மேலும் பல வகையில் சிறப்பூட்டும் க்ரீம் ஃபேர் அண்ட் லவ்லி.

ஒப்பனைக்கு அடிப்படையாக தினமும் ஒரு முறை இடத்தக்கது ஃபேர் அண்ட் லவ்லி; இரு முறை உபயோகித்தாலோ நிறைவான பலனுண்டு. வேளாவேளை உபயோகித்துவாருங்கள், மங்காத சிகப்பு நிறத் தங்க மேனி மனம்போல் உங்களுக்கே.

## சிகப்பான மேனியழகுக்கு மேன்மையான வழி- ஃபேர் அண்ட் லவ்லி

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-FALOV.6-140 TM

# அவன் பார்த்துப்பான்

ஸ்ரீகோமல் சுவாமிநாதன்

## காட்சி – 3 (தொடர்ச்சி)

சொக்க: உன் தம்பியைப் பத்தி உனக்கு உயர்ந்த அபிப்பிராயமே கிடையாதா?

தீபா: ஆறு உங்களைப் பத்தி அவர் கடவுளுக்கு ஒப்பா நினைக்கிறார் மிஸ்டர் சிவராமன்.

சிவ: என்னைப் பொறுத்த வரையில் கடவுள் ஒரு சூனியம். ஆகவே என்னையும் ஒரு சூனியம்னு நினைக்கிறாரோ என்னவோ?

(பிரசாத் உள்ளே வருகிறான்.)

பிரசாத்: குட்மார்னிங் எடிட்டர் சார்!

சிவ: வாப்பா, பிரசாத்.

சொக்க: என்னப்பா, பிரசாத்! என்ன விஷயம்?

பிரசாத்: ஒண்ணுமில்லேப்பா. நானும், என் நண்பர்களும் பெங்களூர் போகிறோம்.

தீபா: நீ பெங்களூர் போய்விட்டு வந்து ஒரு மாசம் கூட ஆகல்லே. திரும்ப அங்கே என்னன்னு விசேஷம்?

சொக்க: அவங்களுக்குப் பெங்களூர் போக ஏதாவது விசேஷம் வேணுமா? நெனைச்சாக் கிளம்பிடுவானுக. ஒரு வாரம் அட்டகாசம் பண்ணிட்டுத் திரும்புவானுக. என்ன மிஸ்டர் சிவராமன்! இந்தப் பசங்களைத் திருத்தவே முடியாதா?

பிரசாத்: என்னப்பா, நாங்க என்ன அப்படிக் கெட்டுப் போயிட்டோம்? ஜாலியா இருக்க வேண்டிய வயசு இது.

சொக்க: இதப் பாருடா இந்தச் சிவராமனுக்கு உங்க வயசுதான் இருக்கும். வாழ்க்கையில் ஒரு குறிக்கோளை வச்சுக்கிட்டு எப்படி முன்னுக்கு வந்துட்டார், பாரு.

பிரசாத்: குறிக்கோளைத் தேடுறது என்னப்பா பெரிய விஷயம்? இன்னும் நாலஞ்சு வருஷத்திலே நாங்களும் ஒரு குறிக்கோளைத் தேடிக்கிறோம். வரேம்பா, வரேன் தீபா.

(பிரசாத் போகிறான். எதிரில் இளமுருகு கூல்டிரிங்கோடு வருகிறான். அதைக் குடித்துவிட்டு இளமுருகுக்குக் கண் ஜாடை காட்டிப் போகிறான்.)

சொக்க: இவன் இப்படிப் பொறுப்பில்லாமயிருக்கானே. இவனை என்ன பண்ணலாம்?

சிவ: சின்ன வயசிலே இடம் கொடுத்துட்டு இப்ப வருத்தப்பட்டு என்ன சார் பிர

"உனக்குச் சுடச்சுட ஒரு பதில் கொடுத்துட்டு வந்தேன். சிவராமன் தன் வறட்டுக் கொள்கையை விட்டுப் பக்தி மார்க்கத்துக்குத் திரும்பும் நேரம் விரைவில் வரும்."

"... பகல் கனவு!..."



யோசனம்? நீங்க கொஞ்சம் கண்டிச்சு வளர்த்திருக்கணும்.

சொக்க: என்னமோ, ஒரே பையன்னு செல்லம் கொடுத்து வளர்த்திட்டேன். பார்ப்போம், எங்கே போய் நிக்கிறதுன்னு. தீபா... நீ காலேஜுக்குத்தானே போகணும்? வா, உன்னே டிராப் பண்ணிடறேன்.

(சொக்கலிங்கமும் தீபாவும் போகிறார்கள், சிவராமன் உட்கார்ந்து எழுத ஆரம்பிக்கிறான்.)

இள (சிவராமன் அருகில் வந்து): சார், ஒரு நாலு நாள் லீவு வேணும்.

சிவ: . என்னப்பா விஷயம்?

இள: ஊர்லே எங்கம்மாவுக்கு உடம்பு சரியில்லேயாம். கடுதாசி வந்தது.

சிவ: உங்க ஊர் எது?

இள: மதுரைக்குப் பக்கத்திலே ஒரு கிராமம் சார்...போயிட்டு நாலே நாள்லே வந்திடறேன்.

சிவ: போயிட்டு வா... மானேஜர் கிட்டே லீவு லெட்டர் எழுதிக் கொடுத்திட்டுப் போ....



(இளமுருகு போகிறான். சிவராமன் மேஜையில் உள்ள பைலே எடுத்துப் படித்துக் கொண்டிருக்கிறான். சர்மா வருகிறார்.)

சர்மா: சிவராமா... சிவராமா...

சிவ: வாங்க சர்மாஜி. உட்காருங்க. ஏது இந்தப் பக்கம்?

சர்மா: உனக்குச் சுடச் சுட ஒரு பதில் கொடுத்துட்டு வந்தேன்.

சிவ: எனக்குப் பதிலா? என்னது?

சர்மா: நீ உன் பத்திரிகையிலே பகவத் கீதை இந்த நாட்டுக்குத் தேவையில்லேன்னு எழுதியிருக்கே. நான் என்ன பண்ணினேன், தெரியுமோ? பகவத் கீதை இல்லேன்னு இந்த நாடே இல்லேன்னு 'சத்திய ஜோதி' பத்திரிகைக்குப் பதில் எழுதி அனுப்பி யிருக்கேன்.

சிவ: என்ன எழுதியிருக்கீங்க... காரசாரமா தாக்கியிருக்கீங்களா?

சர்மா: அடுத்த வாரம் வரும் பாரு! சிவராமன் தன் வறட்டுக் கொள்கையை விட்டுப் பக்தி மார்க்கத்துக்குத் திரும்பும் நேரம் விரைவில் வரும்னு எழுதியிருக்கிறேன்.

சிவ: சர்மாஜி! ஏன் இப்படிப் பகல் கனவு காண்கிறீங்க? நான் அவ்வளவு பலவீனமானவனா?

சர்மா: உன்னேவிட நாஸ்திகம் பேசின எத்தனேயோ பேரைப் பார்த்திருக்கேன். உன்னேவிட அறிவிலும் ஆற்றலிலும் ரொம்ப பலசாலிகள். அவா எல்லாம் இப்ப 'ஹரே ராமா ஹரே கிருஷ்ணு'ன்னு ஆரம்பிச்சுட்டா! எங்க சுத்தினுலும் முடிவில் அங்கதான் வந்தாகணும்.

சிவ: அது உங்க ஆசையா இருக்கலாம். ஆனு அனுபவ ரீதியா சாத்தியமில்லே.

சர்மா: தெரியாமத்தான் கேக்கறேன். உனக்கு வயசு முப்பதுகூட ஆகியிருக்காது. அதுக்குள்ளே ஆண்டவனே இல்லேன்னு சொல்ற அளவுக்கு உனக்கு என்னடா அனுபவம் ஏற்பட்டுடுத்து ?

□ ''குறிக்கோளைத் தேடறது என்னப்பா பெரிய விஷயம் ? இன்னும் நாலேந்து வருஷத்திலே நாங்களும் ஒரு குறிக்கோளைத் தேடிக்கிடறோம்!''



சிவ: சொல்றேன் சார். எங்க அப்பா ஒரு பரம ஆஸ்திகர். கோயிலுக்குப் போகாத நாளே கிடையாது. தேவாரம் பாடாத நேரமும் கிடையாது. ஒரு கம்பெனியிலே அக்கௌண்டெண்டா உழைச்சார்..... அந்தக் கம்பெனி முதலாளி அவரைக் கள்ளக் கணக்கு எழுதச் சொன்னான். மனச் சாட்சிக்கு விரோதமான இந்தக் காரியத்தைச் செய்ய மாட்டேன்னு அவர் மறுத்தார். சமயம் பார்த்து அந்த முதலாளி ஒரு கையாடல் கேஸலே அவரை மாட்டி வைச்சான். முதலாளியைக் காட்டிக் கொடுக்கணும்னு எங்கப்பா நினைச்சிருந்தா அரை நொடியிலே அவன் சிக்கி

விருப்பான். ஆனால் கோர்ட்டிலே எங்கப்பா வாயைத் திறக்கலே. ரெண்டு வருட ஜெயில் தண்டனை கெடச்சது.... அப்ப எனக்கு வயசு பத்து. நித்யாவுக்கு எட்டு. எங்களை வளர்க்க எங்கம்மா பட்ட கஷ்டம் கொஞ்சமா, நஞ்சமா? இரண்டு வருஷம் கழிச்சு எங்கப்பா விடுதலையாகி வெளியே வந்தார். எங்கெல்லாமோ போய் வேலை கேட்டார். யாருமே அவருக்கு வேலை தரலே. 'முருகா, முருகா' எனக்கு ஒரு வேலை வாங்கித் தர மாட்டியா முருகான்னு கதறிக் கதறி அந்த வேதனையிலேயே உயிரை விட்டுட்டார். பக்தனுக்கு ஆண்ட

வன் கொடுத்த பரிசு — அப்பக்கூட எங்க அம்மாவுக்குப் பக்தி குறையலே. ஒரு நாள் ரத உத்ஸவத்துக்குத் திருப்பதிக்குப் போனோம், சுவாமி தரிசனத்துக்கு. ஏகக் கூட்டம். எங்கம்மா, நான், என் தம்பி மூணு பேரும் 'க்யூ'விலே நின்னுக்கிட்டிருந்தோம். திமுர்னு ஒரு கூட்டம், நெட்டித் தள்ளி க்யூவைக் கலைச்சுக்கிட்டு, முன்னாலே வந்தது. நெரிசல்லே சிக்கி எங்கம்மா கீழே விழுந்திட்டா. ஒரே களேபரம். களி மண்ணை மிதிக்கிற மாதிரி எங்கம்மாவைக் கூட்டம் மிதிச்சுட்டுப் போயிடுத்து. இரத்த வெள்ளத்திலே எங்கம்மாவோட உயிர் பிரிஞ்சிட்டுது....




பக்தைக்கு ஆண்டவன் தந்த பரிசு. அப்பத் தான் ஆண்டவன் இருக்கானு இல்லை யான்னு ஒரு சலனம் என் மனசிலே ஏற்பட்டுது. அப்புறம் அனாதையான என்னை ஒரு பெரியவர் கூட்டிக்கிட்டுப் போய்ப் படிக்க வைச்சார். அவரோட ஒரே மகளை நான் கல்யாணம் பண்ணிக்க முடிவாகி, மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலம் ஆரம்

ஜாம்னு கோயில்லேயிருந்து புறப்பட்டது. மணப் பந்தலை நான் நெருங்கறதுக்கு முன்னாலே குய்யோ, முறையோன்னு கத்திக்கிட்டு சொந்தக்காரங்க வெளியே வந்தாங்க..... மணப் பெண் புதுப் புடவை கட்டிக் கொண்டு சுவாமிக்கு நமஸ்காரம் பண்ணப் போன போது, குத்துவிளக்கு சரிஞ்சு, பட்டுப் புடவையிலே புடிச்ச தீ, அவளையே கருகடிச்சுட்டுது. சர்மாஜி! மனசாலேகூடத் தப்பு செய்யாத எனக்கு நீங்க சொல்ற ஆண்டவன் திரும்பத் திரும்பக் கசையடி கொடுக்க ஆரம்பிச்சான். ஆண்டவனை என் மனசிலேயிருந்து தூக்கி எறிஞ்சிட்டேன். ஆண்டவன், விதி, முற்பிறவி எல்லாம் கட்டுக் கதை. அதை நம்பறது பைத்தியக்காரத்தனம்ங்கிற முடிவுக்கு வந்திட்டேன். இப்ப சொல்லுங்க, என் முடிவு தப்பா?

சர்மா: கேட்கறதுக்கு மனசுக்குக் கஷ்டமாத்தான் இருக்கு. ஆனால் இப்பவும் சொல்றேன். காரண காரியம் இல்லாம ஆண்டவன் எதையும் செய்யமாட்டான்.

சிவ: அப்படியா... என் வாழ்க்கையிலும் தான் எனக்கு அந்தக் காரணம் புரியலே.... இது மாதிரி காரணம் புரியாத பல விஷயங்களைப் பத்திரிகைகளிலிருந்து கத்திரித்துச் சேகரிச்சு வைச்சிருக்கேன். இதிலே, 'லேடஸ்டா' வந்த விஷயம் இது... படிச்சுப் பாருங்க.....

சர்மா: "நந்தி ஹில்ஸ், மைசூர்.
கிழவர் தற்கொலை. இவ்வூரில் ஆசிரியராகப் பணி புரிந்த அறுபது வயது கிழவர் சபாபதி இன்று காலை தம் வீட்டில் தம் உடலில் மண்ணெண்ணெயை ஊற்றிக் கொண்டு தீக்குளித்து இறந்தார். இவருக்குத் திருமணமாகாத மகள் இருக்கிறாள். தற்கொலைக்கான காரணம் தெரியவில்லை. போலீஸ் புலன் விசாரணை செய்கிறது."
இது மாதிரி நாட்டுலே நிறைய நடக்கிறது. இதுக்கென்ன?

சிவ: இந்தக் கிழவர் ஏன் தற்கொலை பண்ணிக்கணும். இதுவும் கடவுள் செயலா?

சர்மா: நிச்சயமா. இது கடவுள் செயல் தான்.

சிவ: அறுபது வயசுக் கிழவர் மனச்சாந்தியோட பாக்கியுள்ள வாழ்நாளைக் கழிக்க வேண்டியவர் தற்கொலை பண்ணிக்கணும்னு அதுக்கென்ன காரணம்?

சர்மா: காரணத்தை நீ ஆராய்ச்சி செய்து பார்த்தேன்னு, எல்லாமே ஆண்டவன் கட்டளைப்படிதான் நடக்கிறதுன்னு உனக்குப் புரியும்.

சிவ: அந்த ஆராய்ச்சியிலே ஆண்டவன் இல்லேங்கிறதை 'ப்ரூவ்' பண்ணிக் காட்டவும் முடியும்.

சர்மா: சரி... இதை ஒரு சவாலா நான் எடுத்துக்கறேன். இந்த ஒரு விஷயத்தை வச்சே ஆண்டவன் இருக்கான்னு நான் உனக்குப் 'ப்ரூவ்' பண்ணிக் காட்டறேன்.

சிவ: காட்டுங்க. பத்திரிகையில் வந்த இந்தச் சாதாரணச் செய்தி உங்க வழி கரெக்டா என் வழி கரெக்டாங்கிறதை நமக்குத் தெளிவுபடுத்தட்டும்.

சர்மா: சிவராமா! அந்தக் கிழவர் உன் வாழ்க்கையிலே ஏதோ ஒரு மாறுதலைக் கொடுக்கத்தான் இறந்திருக்கார்.

சிவ: இல்லே. சர்மா மாதிரி அவன் பார்த்துப்பான்னு அவன் மேலே பாரத்தைப் போடுற சநாதனிகளுக்குத் தெளிவு ஏற்படுத்தத் தான் இறந்திருக்கார்.

சர்மா: இந்த பாரு. என் எங்கேஜ்மெண்ட் எல்லாத்தையும் ஒதுக்கித் தள்ளிட்டு இந்த உண்மையைக் கண்டுபிடிக்க நானும் தயாராயிட்டேன்.

சிவ: நானும் தயார். ஆனா இந்தப் போட்டியினாலே நம்ப இரண்டு பேருக்கும் உள்ள பரஸ்பர அன்பு பாதிக்கக் கூடாது! நம்ம உறவு ருசி பிசகா ஆயிடக் கூடாது.

சர்மா: ருசி பிசகைப் பத்திச் சமையல் சர்மாகிட்டே பேசாதே.... முருங்கைக் காயை சாம்பார்லே போட்டா என்ன, அவியல்லே போட்டா என்ன? அதனாலே அதன் ருசி மாறிடுமா?

(தொடரும்)



○ அக்பரின் இறுதிக் காலம் துன்பம் நிறைந்ததாக இருந்தது. மது அருந்துவதில் மிதமிஞ்சிய ஆர்வம் காட்டிய அவரது பிள்ளைகளான முராதும், தன்யாலும் இளவயதில் இறந்தனர். பெற்ற பாசம் அக்பரை வாட்டியது. வருந்தித் தவமிருந்து பெற்ற தலைமகன் சலீம் தந்தையை எதிர்த்துத் தனியாட்சி நடத்தத் தொடங்கினான். தன் உயிர் நண்பர் "அபுல் ஃபாஸல்" சலீமால் கொல்லப்பட்டார் என்ற செய்தி கேட்டு அக்பர் நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் வீழ்ந்தார். மான்சிங்கால் ஆதரிக்கப்பட்ட தன் மகன் குஸ்ருவைத் தன் வாரிசாக்கும் திட்டத்திலும் அக்பர் வெற்றி காணவில்லை. கடும் வயிற்றுக் கடுப்பு நோயால் அவதிப்பட்ட அக்பர் கி. பி. 1605ல் இறந்து பட்டார்.

○ அசோகரின் பாறைக் கல்வெட்டு ஒன்றில் (ROCK EDICT VI) பின்வருமாறு மக்களுக்குத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. "நாம் உணவருந்திக் கொண்டிருந்தாலும், அந்தப்புரத்திலிருந்தாலும், படுக்கை அறையிலிருந்தாலும், தனியறையில் அமர்ந்திருந்தாலும், அரண்மனைப் பூங்காவில் இருந்தாலும், எங்கிருந்தாலும், எந்நேரத்திலும் மக்களின் நலன் பற்றிய செய்திகளைத் தமக்கு அறிவிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன."

அசோகரால் தோற்கடிக்கப்பட்ட கலிங்க மன்னன் பெயர் எந்த சரித்திரப் புத்தகங்களிலும் காணப்படவில்லை.

ஒரு மாபெரும் வெற்றிக்குப் பிறகு, போரை நிறுத்திய மன்னன் உலக வரலாற்றிலேயே அசோகன் ஒருவனே.

விலங்கினங்களுக்கும் மருத்துவமனை அமைத்த முதல் மன்னன் அசோகன் என்று யாவரும் அறிவர். ஆனால் நோய்களைத் தீர்க்கும் மூலிகைகளை நாடு முழுவதும் பயிர் செய்ய அசோகமன்னனால் பெரும் பொருள் செலவிடப்பட்டது பலருக்கும் தெரிந்திருக்காது.

—லலிதா நாராயணன்

# சரித்திர ஸ்லைஸ்



ஸ்வாமியே சரணம் ஐயப்பா
மண்டல பூஜை – மகர விளக்கு
சபரிமலை யாத்திரை செல்வோருக்கு
ஒரு நற்செய்தி!

**ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்**




(REGD.)

777 பிராண்ட் *Dhideerex* (FOR INSTANT PREPARATION) 'திடீரெக்ஸ்' 'திடீர்'

● புளியோதரை மிக்ஸ் ● பருப்புப் பொடி ● கருவேப்பிலைப் பொடி மிக்ஸ்

■ திடீர் சாம்பார் கேக் ■ ரசம் கேக் ■ மிளகு ரசம் ■ தக்காளி ரசம் மற்றும் அநேகவித ஊறுகாய்கள், சட்னி, தொக்கு, வத்தல், வடாம் முதலியன.

மேற்படி உணவுப் பொருள்களை வடித்த சாதத்துடன் கலந்து நல்லெண்ணெய் அல்லது நெய் சேர்த்தால் ருசி மிக்க உணவு தயார். (சாம்பார் சாதம், ரசம் சாதம் போன்றது) எருமேலியில் பேட்டை துள்ளின பின்னர், தேவஸ்தானத்தில் விற்கும் வெள்ளை நைவேத்தியம் (சமைத்த சாதம்) வாங்கி அத்துடன் மேற்படி சாம்பார் கேக் முதலியவற்றைத் தேவைக்கு ஏற்பச் சேர்த்தால் ருசிமிக்க உணவாகும்.

இதேபோன்று மஹா சன்னிதானத்திலும் சமைத்த சாதம் வாங்கி உபயோகிக்கலாம். மிகச் சிக்கனமானது. சிரமமின்றி தயாரிக்கவல்லது.

**ஸ்பெஷல் அப்பளாம்** (BROWN பேப்பரில் பாக் செய்தது) நெருப்பில் சுட்டால் கருகாது. பொரித்தால் எண்ணெய் குடிக்காது.

தயாரிப்பாளர்கள்: **M/s. R. S. N. அய்யர் & R. S. G. அய்யர்** உரிமையாளர்கள்

**ஸ்ரீ கணேஷ்ராம் & கோ.,**

46, தம்பு செட்டித் தெரு, (போன்: 20401) சென்னை - 600 001

---

# அருள்மிகு நாச்சியார் திருக்கோயில்

## ஸ்ரீவில்லிபுத்தூர்

**ஆஸ்திக அன்பர்களுக்கு ஒரு வேண்டுகோள்!**

ஸ்ரீவில்லிபுத்தூர், ஸ்ரீ நாச்சியார் (ஸ்ரீ ஆண்டாள்) திருக்கோயிலுக்கு தினசரி நெய்வேத்தியத்துக்கு ரூ. 250/- செலவாகிறது. பொதுமக்களின் அபிப்பிராயத்துக்கு இணங்க, இந்த செலவை நன்கொடையாக வருஷத்துக்கு 365 நபர்களிடமிருந்து எதிர்பார்க்கப்படுகிறது. ஆஸ்தீக மகாஜனங்கள் இந்த கைங்கர்யத்தில் ஈடுபட்டு, ஸ்ரீ ஆண்டாள் அருள்பெறுமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

நன்கொடை அளிக்கும் அன்பர்களின் பேரில் அர்ச்சனை செய்து, பிரசாதம் அனுப்பி வைக்கப்படும்.

நாள்: 13-11-76

**வி. வாசகப்பெருமாள்,** பி.காம்., பி.எல்.
தேர்வு நிலை - நிர்வாக அதிகாரி

# சென்னை இசை விழா

'ரூபின் வந்துவிட்டாரா? அப்படியானால் சென்னையில் சங்கீத சீசன் ஆரம்பமாகிவிட வேண்டியதுதான்' என்ற அளவுக்கு இங்கே பிரபலமாகி விட்ட அமெரிக்கர் ஜேம்ஸ் ஏ. ரூபின். கர்நாடக இசையில் அளப்பரிய ஆர்வம் கொண்டு ஒவ்வொரு ஆண்டும் டிசம்பரில் சென்னை வந்து பைஜாமா ஜிப்பாவும் சரிகை அங்கவஸ்திரமும் அணிந்து பல்வேறு கலை நிகழ்ச்சிகளுக்குச் செல்லும் அவர் தமது அனுபவங்களை இங்கு வழங்குகிறார்.

இந்தியாவின் மிக முக்கியமான கலாச்சார கேந்திரங்களில் ஒன்றான சென்னையில் கடந்த ஐம்பது ஆண்டுகளாக சங்கீத வித்வத் சபை ஆதரவில் இசை மகாநாடுகள் நடைபெற்று வருகின்றன. சமீப காலத்தில் இது இந்தியாவின் வித்வான்கள், இசை நிபுணர்கள் கூடும் இடமாக மட்டுமின்றி மேற்கத்திய இசை வல்லுனர்களும் ஆராய்ச்சியாளர்களும் கூடக் கூடும் இடமாக மாறியிருக்கிறது. கலைகளை



வளர்க்கும் வேறு பல சபாக்களும் கடந்த பல ஆண்டுகளாகத் தங்களது மகாநாடுகளையும் இசை நிகழ்ச்சிகளையும் இதே சமயத்தில் திட்டமிட்டு நடத்தி வருகின்றன. ஆகக்கூடி "சென்னை இசை விழா" என்றே இந்த டிசம்பர் பிற்பகுதிப் பருவம் பெயர் பெற்று விட்டது. ஒரே சமயத்தில் இரண்டு மூன்று பெரிய வித்வான்களின் இசை நிகழ்ச்சிகள் வெவ்வேறு சபாக்களில் நடப்பது சகஜமாதலால் எங்கே செல்வது என்று தீர்மானிக்க முடியாமல் தர்ம சங்கடமான நிலை அடிக்கடி உருவாகும். எங்கள் தேசத்தின் டெலிவிஷனில், இதே போல் இரண்டு பிரமாதமான நிகழ்ச்சிகள் ஒரே சமயத்தில் ஒலிபரப்பாக, எதைப் பார்ப்பது என்று புரியாமல் நாங்கள் தவிப்பதுண்டு.

அதிர்ஷ்டவசமாக, இந்தியாவில் கச்சேரிகளின் போது எப்போது வேணுமானாலும் வரவும் போகவும் ரசிகர்கள் அனுமதிக்கப்படுகிறார்கள். இது தவறாகக் கருதப்படுவதில்லை. எனவே, ஒரே மாலையில் இரண்டு முக்கிய கச்சேரிகளின் பெரும் பகுதிகளைக் கேட்பது சாத்தியமாகிறது! இந்த நாட்களில் மழை கிடையாது; பகல் நேரம் கதகதப்பாகவும் மாலை நேரம் நறுமணம் உள்ளதாகவும் விளங்குகின்றன. அழகான இசை, நடன, நாடக நிகழ்ச்சிகள் ஒரு புறம்; இந்தியாவின் பிரமாதமான உபசரணைப் பண்பாடு மறு புறம். சுவாரஸ்யத்தைத் தூண்டும் உணவு வகைகள்; அவற்றைவிட சுவாரஸ்யமான சுற்றுலாப் பயணங்கள். இவையெல்லாம் சேர்ந்து டிசம்பர் மாதச் சென்னையை மறக்க முடியாததாக்கிவிடுகின்றன.

வித்வத் சபையின் எல்லாக் கச்சேரிகளின் போதும் சென்னை மாநகரின் முக்கியமான குடும்பங்களைச் சேர்ந்தவர்களைக் காணலாம். இந்திய இசை நிகழ்ச்சிகளின் விச்ராந்தியான சூழ்நிலை, இஷ்டப்பட்டபடி ரசிகர்கள் வருவதும் போவதுமாக இருப்பது, இடையில் தங்களைவிட உயர்ந்தவர்களைச் சந்திக்கும் போது வணங்கி இன்மொழி பேசுவது முதலியவை யெல்லாம் அயல்நாட்டிலிருந்து வந்த ஒருவரை முதலில் திணற அடிக்கின்றன. கச்சேரியின் போது ரசிகர்கள் கலை அற்றலை உணர்த்தும் உச்ச கட்டத்தில் கரகோஷம் செய்தல், "ஆஹா!" "பேஷ்,

ஜேம்ஸ் ஏ. ரூபின்

பேஷ்!'' என்றெல்லாம் உற்சாகப்படுத்துதல், ஆனந்த மிகுதியில் முனகுதல், ஒப்புதலின் மையை உணர்த்துவது போல் தலையசைத்து அனுபவித்தல் முதலியவை மேல்நாட்டி லிருந்து வந்த வரை மேலும் குழப்பும்! ஒவ்வொரு பாட்டும் முடிந்த பிறகு பெரிய அளவில் கரகோஷம் செய்யாததும் கச்சேரி முடிந்த பிறகுகூட கரகோஷம் செய்யாததும், ''இந்தக் கச்சேரியை நாம் ஒருவர்தான் விரும்பி ரசித்தோமோ?'' என்ற எண்ணத்தைக்கூட மேனாட்டு ரசிகரிடம் தோற்றுவிக்கும்! 'பான் ஓரியண்ட் ஆர்ட் ஃபௌண்டேஷன்' என்ற அமைப்பின் தர்மகர்த்தாப் பொறுப்பு ஏற்றவன் என்ற முறையில் முதன் முதலாக நான் சென்னைக்கு வந்த போது மேலே விவரித்த அனுபவங்கள் எனக்கும் ஏற்பட்டன. அதன் பிறகு நான் ஒவ்வோர் ஆண்டும் ஏதோ ஸ்தல யாத்திரை போவது போல் தப்பாமல் சென்னையை நாடி வந்து கொண்டிருக்கிறேன். அமெரிக்காவில் ஒலிபரப்பவும் எதிர்காலத்துக்காக அங்கே பாதுகாத்து வைக்கவும் இந்திய இசையைப் பதிவுசெய்து கொண்டு செல்கிறேன். இதற்காகவே முக்கியமாக இந்தியாவுக்கு வருகிறேன். தென் இந்திய கர்நாடக சங்கீதத்தில் மேன் மேலும் எனக்கு ஈடுபாடு ஏற்பட ஏற்பட எனக்குச் சங்கீத வித்வான்களும் சங்கீதப் பிரியர்களும் புதிய நண்பர்களானார்கள். அவர்கள் நான் தியாகராஜர் ஆராதனையைக் கண்டு கேட்டு ரசிக்க வேண்டும் என்று வற்புறுத்தி வந்தார்கள். ஆனால் இதற்குச் சந்தர்ப்பம் ஏற்படாமல் தள்ளிக் கொண்டே போயிற்று.

1966-67ல்தான் எனக்கு மும்முனை அதிர்ஷ்டம் அடித்தது! இந்த அதிர்ஷ்ட மழைக்கு நான் ஐ. நா. சபை பிரதான அதிகாரி திரு சி. வி. நரசிம்மனுக்கும் ஸ்ரீ சதாசிவம்—ஸ்ரீமதி எம். எஸ். தம்பதிக்கும் நன்றி கூற வேண்டியவனாய் இருக்கிறேன். 1966 அக்டோபரில் ஐ. நா. சபை பிரதமக் காரியதரிசி ஸ்ரீ உதாண்டின் அழைப்பை ஏற்று ஸ்ரீமதி எம். எஸ். அந்த உலக அரங்கில் பாட வந்தார். அச்சமயம் திரு சி. வி. நரசிம்மன், அமெரிக்காவின் கிழக்குக் கோடியிலிருந்து மேற்குக் கோடி வரை பல நகரங்களிலும் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் இசை நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்தார். பின்னர் இந்தச் சுற்றுப் பயணத்தை நிர்வகிக்கும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. 'பான் ஓரியண்ட் அண்ட் ஃபௌண்டேஷன்' ஆதரவில் இந்தக் கச்சேரிகள் நிகழ்ந்த சமயம் நான் எனது தொழில் துறையிலிருந்து (வீட்டு மனைகள் அபிவிருத்தி — கட்டடங்கள் அமைத்தல்) ஆறு மாதம் விடுமுறை எடுத்துக்கொண்டேன். ஸ்ரீமதி எம். எஸ்ஸின் சுற்றுப் பயணம் அமோக வெற்றியாக முடிந்த பிறகு ஸ்ரீ சதாசிவம், ''நீண்ட காலம் தங்குவது போல் இம்முறை சென்னைக்கு வாருங்கள்'' என்றார். அந்த அழைப்பை ஏற்றுக் கொண்ட நான், அந்த ஆண்டு சென்னை இசை விழாவிலும் இருந்தேன்; பிறகு திருவையாறும் சென்றேன்.

ஒரு சங்கீத நிகழ்ச்சி மந்திர சக்தி வாய்ந்ததாக எப்போது மாறுகிறது என்று கேட்டால் திருவையாற்றில்தான் என்பேன். அவ்விடம் அமைதியும் எழிலும் நிரம்பியது. பக்தி உணர்ச்சி ஒருபுறம் இருக்க, திருவையாறு தஞ்சை மாநிலத்தின் பசுமைச் செழிப்புக்கு மத்தியில் அமைந்து மனத்தைக் குளிர்விக்கிறது. காவேரி நதி கம்பீர அமைதியுடன் பாய்கிறது. அதன் கரையில் தென்னை மரங்களும் பசுமையான இதர மரங்களும் சூழ்ந்திருக்க இடையில் அமைந்துள்ளது ஒரு பெரிய கீற்றுக் கொட்டகை. ஆயிரக்கணக்கான சங்கீதப் பிரியர்கள் கொட்டகைக்குள்ளேயும் வெளியிலும் குழுமியிருந்து மூன்று நாட்கள் தியாகராஜர் கிருதிகளைக் காலை முதல் இரவு வரை பல வித்வான்கள் பாடக் கேட்கிறார்கள். பிரபலமான சங்கீத வித்வான்களும் பாடுகிறார்கள்; இளம் பாடகர்களும் தங்கள் திறமையைக் காட்டுகிறார்கள். தியாகராஜரின் முன்னிலையில் பாடி அவர் ஆசியைப் பெறுவதாகவே கருதிப் பக்தி சிரத்தையுடன் பாடுகிறார்கள். இந்தச் சூழல் பல சந்தர்ப்பங்களில் கலைத் திறனின் உன்னத நிலைகளுக்குச் செல்ல வித்வான்களை ஊக்குவிக்கிறது.

பஞ்சரத்ன கிருதிகளைக் கோஷ்டிகானமாகப் பாடும் போதோ சில வித்வான்கள் உணர்ச்சி வசப்பட்டுவிடுவதையும் அவர்கள் முகங்கள் மந்திரத்தால் கட்டுண்டது போல் விளங்குவதையும் என்னால் காண முடிந்தது. இசை உணர்வோடு இறை உணர்வையும் ஊட்டும் இந்த இடத்திலேதான், சாதாரணமாக மற்ற மேடைகளில் இணை சேராத வாய்ப்பாட்டு — பக்கவாத்திய வித்வான்கள் கொஞ்சமும் தயக்கமின்றி ஒன்றாக மேடை ஏறுவதையும் பார்த்தேன்.

அமெரிக்காவில் ஹிந்துஸ்தானி சங்கீதம் மிகப் பிரபலமடைந்த போதிலும் சமீபகாலமாகப் பல அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில் தன்னிகரற்ற கர்நாடக சங்கீதத்துக்கு அதிகமான வரவேற்பு இருந்து வருகிறது. பேராசிரியர்கள் ராபர்ட் ப்ரௌன், ஹரால்ட் பவர்ஸ், ஹோவர்ட் போட்ரைட், அலன் டி. ஸாப், மில்லார்ட் பி. ரோஜர்ஸ் போன்றவர்கள் பல்வேறு பல்கலைக் கழகங்களில் இந்திய இசையில் ஈடுபாடு கொண்டு மாணவர்களை ஊக்குவித்து வருகிறார்கள்.

அமெரிக்காவில் இந்திய இசைக்கு ஆதரவு பெருகப் பெருக, அங்கிருந்து வரும் மாணவர்கள் இந்தியாவில் சங்கீதக் கச்சேரிகள் நிகழ்த்திப் பாராட்டும் புகழும் பெறுகிறார்கள். 'தென்னிந்தியாவில் ஃபோர்டு — கார்ட்டர்— கிஸ்ஸிஞ்சருக்கு இணையாக மிகப் பிரபலமடைந்த ஓர் அமெரிக்கர் யார்?' என்றால் தயக்கமின்றி 'ஜான் ஹிக்கின்ஸ்' என்று சொல்லலாம்! சாதாரணமாகப் பத்து இருபது ஆண்டுகள் பாடினாலும் கிட்டாத கர்நாடக இசை ஆற்றலை அவர் இரண்டரை ஆண்டுகளில் பெற்றது தென்னிந்தியாவையே பிரமிக்க வைத்தது. அலட்சியபாவத்துடன் முதலில் ஹிக்கின்ஸைக் கேட்க வந்தவர்கள் பிறகு நிமிர்ந்து உட்கார்ந்தார்கள்!

அமெரிக்காவுக்கு வரும் இந்திய இசைக் கலைஞர்கள் சம்பாதிக்கும் நல்லெண்ணம், அரசாங்க ரீதியிலே பரிவர்த்தனையாகும் பல்வேறு விதமான உதவிகள், மானியங்கள், கடன்கள், பிரசாரங்கள் ஆகியவற்றைவிடப் பல மடங்கு மேலானது. இந்தக் கலைஞர்கள் ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகத்தால் இரு நாடுகளுக்கும் கிடைக்கும் லாபமோ கணக்கிட்டு மாளாதது!

# சேரமான் காதலி

## கண்ணதாசன்

### அத்தியாயம் 4

## பட்டத்து யானையின் பரிசு

இன்று கேரள நாட்டில் ஓணம் பண்டிகையும், பூரம் பண்டிகையும் பிரபலமாக இருக்கின்றன.

சேர நாடு பல பகுதிகளுக்குப் பிரிக்கப்படுவதற்கு முன்பு ஒரே திருவிழா தான் மிகப் பிரபலமான திருவிழாவாக இருந்தது. அதுதான் கொடுங்களூர் பகவதி அம்மனுக்கு எடுக்கப்பட்ட விழா.

கோடை காலத்தில் மழை வேண்டி நடத்தப்படும் விழாவாக அது அமைந்திருந்தது.

வடநாட்டு ஹோலிப் பண்டிகையில் நடப்பது போல் இங்கேயும் சாயத் தண்ணீரை ஒருவர் மீது ஒருவர் தெளித்து விளையாடுவார்கள்.

அந்தச் சாயத் தண்ணீர், ஒன்று வெறும் மஞ்சள் நீராக இருக்கும்; இல்லையேல் சிறிது சுண்ணாம்பு கலந்து சிவப்பு நீராக இருக்கும். ஆரத்திச் சோறு நிறம் மாறுகிறது அல்லவா, அது போல.

அந்தப் பக்கம் பாண்டிய நாட்டு எல்லையில் தென் திருவிதாங்கோடு — நாஞ்சில் நாட்டிலிருந்து அது ஆரம்பமாகும்.

இந்தப் பக்கம் கொங்கு நாட்டு எல்லையில், மலபாரில் இருந்து ஆரம்பமாகும்.

விசால கேரளம் முழுவதிலும் இந்த விழா எல்லோராலும் கொண்டாடப்படும்.





வந்து குடியேறிய சிறியன் கிறிஸ்தவர்கள், கேரளத்திலேயே பிறந்து மதம் மாறியவர்கள், யூதர்கள் அனைவரும் அந்த விழாவைக் கொண்டாடுவார்கள்.

மகமதியர்கள் அதைக் கொண்டாடுவதில்லை என்றாலும், அந்த நாளில் இந்துக் குடும்பங்களிலுள்ள தங்கள் நண்பர்களோடு விருந்துகளில் கலந்து கொள்வார்கள்.

காவிரிப் பூம்பட்டினத்தில் இந்திர விழா நடக்கும்போது சமணப் பள்ளிகளிலும் பிரார்த்தனை நடப்பது போல், பகவதியம்மன் பண்டிகையின் போது கிறிஸ்தவ ஆலயங்களிலும் மழைக்காகப் பிரார்த்தனை நடக்கும்.

மதங்களுக்குள் ஒருமை என்பது முடியாட்சிக் காலத்திலேயே கைக் கொள்ளப்பட்ட ஒரு கொள்கையாகும்.

சோழ நாட்டில் சமண–பௌத்தர்களும், சேரநாட்டில் அரபு, யூத, கிறிஸ்தவர்களும் பெருமளவுக்கு

இருந்த போதிலும், அவற்றை ஆண்டவர்கள் இந்து மன்னர்களே.

பதினைந்தாம் நூற்றாண்டு வரையில் பாண்டிய நாட்டில் மட்டும் இந்து மார்க்கத்தைத் தவிர வேறு மார்க்கங்கள் பரவி விரவி நிற்கவில்லை.

பாரதநாட்டில் மிக முந்திய காலத்திலேயே பல வகையான மார்க்கங்கள் நுழைந்துவிட்ட முதல் நாடு சேர நாடாகும்.

ஆகவே மூன்றும் சேரமான் பெருமாள் காலத்தில் அத்தனை மார்க்கங்களும் பரிபூரணமாக அங்கீகரிக்கப் பட்டுவிட்ட நிலை. பகைமை என்பதே அறவே இல்லாத நிலை.

'எல்லோருக்கும் மூலம் இறைவனே' என்று இயற்கையாகவே உணர்ந்திருந்த நிலை.

ஆகவே ஒரு மதத்தினரின் திருவிழாவில் கலந்துகொள்ளும் பிற மதத்தினர் அதை ஒரு வேடிக்கையாகவும், உற்சாகமாகவும் கருதினார்களேயன்றி, வெறுப்போடு நோக்கியதில்லை.

கொடுங்களூர் பகவதியம்மன் கோயில் சகல மதத்தினரையும் இணைக்கும் பாலமாகவும் இருந்தது.

இன்று வேளாங்கண்ணியும், நாகூர் தர்க்காவும் இந்துக்களைக் கவர்ந்து இழுப்பதுபோல், அன்று பகவதி கோயிலும் மற்றவர்களைக் கவர்ந்து இழுத்தது.

சேரன் செங்குட்டுவன் எழுப்பிய பத்தினிக் கோட்டம் இந்தப் பகவதியம்மன் கோவில்தான் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள்.

இன்று தமிழ் நாட்டின் எல்லையிலே இடிபாடாகக் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிற ஒரு கோவில்தான் பத்தினிக் கோட்டம் என்று கூறுவோரும் உண்டு.

இது எப்படி இருப்பினும், 'கொடுங்கோலால் மதுரை எரிந்தது' என்னும் செய்தியைச் சிலப்பதிகாரத்தில் படித்துவிட்டுக் கொடுங்கோளூர் என்ற பெயரையும், அது மருவிக் கொடுங்கோளூர் என்றானதையும் பார்க்கும் போது, செங்குட்டுவன் கட்டிய கோயில் இதுவே என்ற எண்ணம் பலப்படுகிறது.

'பகவதி' என்ற பெயரும் ருத்ர தேவதையைக் குறிப்பதாகும்.

கண்ணகியின் கோபத்தால் பாண்டிய நாடு எங்கணும் வெப்ப நோய் ஏற்பட்டதாகவும், அதைத் தணிக்க மழை வேண்டி அமைத்த அம்மனே மாரியம்மன் எனவும் கூறப்படுகிறது.

கண்ணகிக்கு அப்படி மலையாளத்தில் தரப்பட்ட பெயர்தான் பகவதி என்றும் நாம் கருதலாம்.

'செண்டை' என்ற வாத்தியம் கேரளத்தில் பிரசித்தமானது. நீண்ட வடிவம் உள்ள மிருதங்கம்போல் அது இருக்கும். பழங்காலக் குகை ஓவியங்களில் இந்த வாத்தியம்தான் காணப்படுகிறது.

செண்டையும், பெரிய வகை ஜாலராவும், நீண்ட கொம்பு வாத்தியங்களும் இருவஞ்சைக் களத்தைச் சங்கீதப் போர்க்களமாக ஆக்கிக்கொண்டிருந்தன.

அசல் புரவிகளிலேயே நாட்டியமாடும் புரவிகள், அந்தத் தாளத்துக்கேற்ப நாட்டியமாடிக்கொண்டிருந்தன.

முச்சந்திகளிலே கணிகையர் நடனம் இரவு பகலாக நடந்து கொண்டிருந்தது.

தென்னஞ் சோலைகள் நிறைந்த நகரமாதலின் மக்களெல்லாம் வெயில் தெரியாமலேயே விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

பல வகையான குங்குமப் பாத்திரத்தோடு சில அங்காடிகள் ஜொலித்தன.

இருபத்தியொரு வகை மலர்களையும் சில அங்காடிகள் விற்பனை செய்தன.

அரைப்பதற்கு உதவும் சந்தனக் கட்டைகள் சில கடைகளில் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன.

அரைத்துக் காய வைக்கப்பட்ட சந்தன வில்லைகளோடும் சில கடைகள் இருந்தன.

மாதர்களின் கார் கூந்தலில் களித்துக் கொண்டிருந்த முல்லைப் பூக்கள், அவர்கள் துள்ளி நடந்து சென்ற போது — துடித்துக் கீழே விழுந்து சாலையையே மூடிக் கொண்டிருந்தன.

அந்த மலர்களோடு சேர்ந்து விழுந்த வண்டுகள் சில, மண்ணிலும் அந்த மலர்களைப் பிரிய மனமின்றி ஒட்டிக்கிடந்தன.

தண்டைகள் அணிந்த இளங் கால்கள் அவற்றை மிதித்ததில் அந்த வண்டுகள் மரணம் அடைவதற்குப் பதிலாக ஒரு சுகத்தை அனுபவித்தன.

செப்பிளங் கொங்கைச் சேயிழையாரோடும், ஒப்ப நடந்த காதலர் நெற்றி சந்தனக் கோடுகளால் மின்னிக் கொண்டிருந்தது.

மாதர் நெற்றியில் காலை இளம் பரிதியும், காளையர் நெற்றியில் மாலை இளம் வானமும் காட்சி அளித்தன.

தண்ணீரிலே பட்டுத் தென்னையைத் தடவி மாதர் கூந்தலில் இருந்த தேங்காய் எண்ணெய் வாசத்தை அள்ளிக் கொண்டு தெரு வழியே நடந்த தென்றல் காற்று மங்கல கீதம் பாடிற்று.

அம்மனை நீராட்டும் அபிஷேக தீர்த்தம் பட்டத்து யானையின் மீது வருவது வழக்கம்.

அந்த யானையின் முதுகில் கிடக்கிற பட்டுப் பீதாம்பரத்தைப் பார்த்து

# ப்ரூ: அதன் சுவையே தனி,
# ஸ்ட்ராங்கானதில் அது பாங்கானது

சிறப்பான காபி
விரும்பும் அனைவருக்கும்

ப்ருவின் தனிப்பட்ட சுவை, அதற்கு நாடெங்கும் மகத்தான வரவேற்பு அளித்திருக்கிறது. மேலும் இன்ஸ்டன்ட் காபிகளில் இதற்கு முதன்மையான இடம் அளித்திருக்கிறது. ஒவ்வொரு நாளும் அதன் தனிப்பட்ட சுவையும் ஸ்ட்ராங்கான குணமும் வெகுவேகமாகப் பரவுகிறது. ஒவ்வொரு முறையும் ப்ருவின் சுவையும் மணமும் குணமும் உங்களுக்கு நிறைவையே தரும். இன்றே ப்ரு காபி பருகிப்பாருங்கள்.




தென்னிந்தியாவின் முதன்மையான இன்ஸ்டன்ட் காபி ப்ரூ
வெகுவேகமாக நாடெங்கும் எல்லோரும் விரும்பும் காபியாகி வருகிறது.

OBM-4756A/3

இளம் பெண்கள் ஏக்கப் பெருமூச்சு விடுவது வழக்கம்.

சேரமானைக் கனவு காணாத பெண்கள் சேர நாட்டில் மிகக் குறைவு.

அவர்களிலே அந்தச் சிந்தனையே இல்லாத இரண்டு பெண்கள் திருவிழாவை வேடிக்கை பார்த்துக் கொண்டே தெரு வழியே நடந்து வந்தார்கள்.

ஒருத்தி, சலீமா; இன்னொருத்தி ஜெபுன்னிஸா.

சலீமாவுக்கு அந்தத் திருவிழா வேடிக்கையாகவே இருந்தது.

கிராமங்களில் இருந்து அணி அணியாக வந்த மாட்டு வண்டிகளையும், குதிரை வண்டிகளையும் பார்த்து ஆச்சரியப்பட்டபடி அவர்கள் நடந்து வந்து கொண்டிருந்தார்கள்.

அராபிய மக்களுக்குக் குதிரைகள் அதிசயமானவை அல்ல; ஆனால் மாட்டு வண்டிகள்தான் அவர்களுக்கு வேடிக்கையாக இருந்தன.

சலீமாவும் ஜெபுன்னிஸாவும் நடந்து வந்து கொண்டிருந்தபோது, 'பழைய சேனைக் கொத்தளம்' என்ற பகுதியில், தென்னங் கீற்றினால் ஒரு பந்தல் போடப்பட்டிருந்தது. அந்தப் பந்தலில் மகமதியப் பெண்கள் அதிகமாகவும், இந்துப் பெண்கள் குறைவாகவும் கூடியிருந்தார்கள்.

ஜிகினாவினால் அலங்காரம் செய்யப்பட்ட ஆடை அணிந்து கொண்டு இரண்டு அழகான இளம் பெண்கள் ஆடிக் கொண்டிருந்தார்கள்.

அதைப் பார்த்ததும் ஜெபுன்னிஸாவுக்குக் குஷி பிறந்து விட்டது. வாத்தியக்காரர்களின் அருகிலே அவள் போய் உட்கார்ந்து கொண்டாள். சலீமா கூச்சப்பட்டு ஒரு மூலையில் நின்றுகொண்டாள்.

ஒரு பாட்டு முடிந்ததும் ஜெபுன்னிஸா தன்னை அறியாமல் பாடத் தொடங்கினாள்.

அது சேர நாட்டில் மிகவும் பிரபலமான ஓர் உருதுப் பாடல். கை தட்டிக் கொண்டே ரசிக்கக்கூடிய பாடல். சபையினர் திரும்பத் திரும்ப அந்தப் பாடலைப் பாட வைத்தார்கள்.

அது நடந்து கொண்டிருக்கும் போதே மேளதாளங்களின் ஒலி கேட்டது. அது பட்டத்து யானை வருவதற்கு அடையாளம்.

யானைக்கு முன்னால் செண்டை வாசிக்கக் கூடாது என்றொரு சம்பிரதாயம் காரணம். அதனால் யானைக்கு மதம் பிடிக்கும் என்று நம்பினார்கள்.

அபிஷேக நீரோடு யானை வரும் ஒலி கேட்டதும் ஆங்காங்கே நடந்து கொண்டிருந்த நிகழ்ச்சிகள் நிறுத்தப்பட்டன. எல்லாக் கூட்டமும் ஓர் இடத்தில் கூடிவிட்டது.

ஆனால் செண்டை வாசித்தவர்கள் தங்களையும் அறியாத குதூகலத்தோடு ஓங்கி அடிக்க ஆரம்பித்தனர்.

யானை ஒரு முறை பிளிறிற்று; மறு முறையும் பிளிறிற்று. அதற்கு மதம் பிடிக்கத் தொடங்கிற்று.

தன் முதுகிலே இருந்த பூசாரியை அபிஷேகக் குடத்தோடு கீழே தள்ளிற்று.

கூட்டம் பயந்து நாலாபுறமும் ஓடத் தொடங்கிற்று.

நெரிசலில் சிக்குண்டு பலர் காயம் அடைந்தார்கள்.

அங்குமிங்கும் ஓடிய பட்டத்து யானை சில கடைகளை உருட்டிற்று. குங்குமத்தைத் தன் தும்பிக்கையால் உறிஞ்சித் தன் தலை மீது போட்டுக் கொண்டது.

கோவில் தாங்காத அளவுக்குக் கூட்டத்தினர் கோயிலுக்குள் நுழைந்தார்கள்.

'பட்டத்து யானைக்கு மதம் பிடித்து விட்டது' என்ற செய்தி காட்டுத் தீ போல் எங்கும் பரவிற்று.

உடனடியாகத் தண்டோரா போடுகிறவர்கள் தெருவெங்கும், 'யாரும் வெளியே வரவேண்டாம்' என்று தண்டோராப் போட்டார்கள்.

செய்தி வந்தபோது பூஜையில் இருந்த சேரமான் பெருமான் உடனே தன் புரவியைக் கொண்டு வரச் சொல்லி ஏறி அமர்ந்து கோயில் சாலையை நோக்கி விரைந்தார். அவர் பின்னாலேயே சில புரவி வீரர்களும் விரைந்தார்கள்.

கோயில் சாலைக்கு வந்ததும் அவர் கண்ட காட்சி அவரைத் திகைக்க வைத்தது.

பட்டத்து யானை ஓர் அராபியப் பெண்ணைத் தும்பிக்கையால் வானத்தை நோக்கித் தூக்கியபடி எறிவதற்குத் தயாராக இருந்தது.

ஆம்; சலீமாவையே!

புரவியை விட்டுக் கீழே இறங்கிய சேரமான் கையை வானத்தில் உயர்த்தி மந்திரம் போல் எதையோ சத்தம் போட்டுச் சொன்னார். அந்தப் பரிபாஷை யானைக்குப் புரியும்.

அமைதியாக அந்த யானை அவரை நோக்கி வந்தது தும்பிக்கையில் சலீமாவோடு.

இரண்டு கைகளையும் அதன் முன்னே நீட்டினார் சேரமான்.

யானை அமைதியாக அந்தக் கைகளில் சலீமாவை வைத்தது. (தொடரும்)

---



**மனோதத்துவம்**

கடைக்குச் சாமான் வாங்கப் போகும்போது பசியோடு போகாதீர்கள். நிறைய, அதாவது தேவைக்கு அதிகமாக வாங்கிக்கொண்டு வந்துவிடுவீர்கள். பாபு - பேஜுண்ட்

குட்மார்னிங் டாக்டர்!

# மருத்துவருக்கு மாசு கற்பிக்கும் நோய்!



"ஒருவர் மாற்றி ஒருவர் திரும்பத் திரும்ப எங்கள் குடும்பத்தவர் அனைவருமே இந்தச் சொறி சிரங்கினால் தொல்லைப்படுகிறோம், டாக்டர்!"

தாயார், மகன் இருவரையும் நான் பரிசோதித்துவிட்டு, "மேல் பூச்சுக்கு ஒரு மருந்து எழுதிக் கொடுக்கிறேன், அதைக் கவனமாக, நான் சொல்லுகிற மாதிரி உங்கள் பையனுக்கும் இந்தச் சொறி சிரங்கு வந்துள்ள மற்றவர்களுக்கும் தடவ வேண்டும். முதலில் சோப்பு அல்லது பூவந்திக் கொட்டை உபயோகித்து வெந்நீரால் பையனைக் குளிப்பாட்ட வேண்டும். உடம்பில் ஈரம் காயும்வரை பையனுக்குச் சட்டை, நிஜார் எதுவும் போட வேண்டாம். ஈரம் உலரும் வரை குளியலறையிலேயே நிற்கட்டும். பிறகு இந்த மருந்தைப் பஞ்சில் நனைத்துச் சிரங்கு உள்ள பகுதிகளில் தடவ வேண்டும். உடலில் தடவிய மருந்து காய்ந்தபிறகு இஸ்திரி போட்ட துணிகளை அணிய வேண்டும். மறுநாள் பையன் குளிக்க வேண்டாம். அடுத்த நாள் குளித்தால் போதும்" என்றேன்.

"இப்படி எத்தனை நாட்கள் மருந்து தடவ வேண்டும்?"

"மூன்று முறை தடவினால் போதும்."

"உள்ளுக்கு மருந்து ஏதும் சாப்பிட வேண்டாமா, டாக்டர்?"

"இப்போதைக்கு ஏதும் தேவையில்லை. ஊசி போடவும் அவசியம் இல்லை. ஆனால் ஒரு விஷயத்தில் நீங்கள் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். சிரங்கு கண்டவர்களுக்குச் சிகிச்சை அளிக்கும்போது கண்டிப்பாக இஸ்திரி போட்ட துணிமணிகளைத்தான் உபயோகிக்க வேண்டும். ஒட்டுவாரொட்டி நோய் இது. சிரங்கு வந்தவர்கள் உபயோகிக்கும் காகிதம், பேனா, பாத்திரங்கள் இவற்றின் மூலம் மற்றவர்களுக்கு மிக எளிதில் பரவும் தன்மையுடையது."

**"சொறி சிரங்குக்கு நீங்கள் எழுதிக் கொடுத்த மேல் பூச்சு மருந்து என்ன?"**

"பென்ஸைல் பென்ஸோவேட் எமல்ஷன் *(Benzyl Benzoate Emulsion 50%)*!"

**"சொறி சிரங்கு எப்படி ஏற்படுகிறது? எப்படி பரவுகிறது?"**

"சிரங்கு உள்ளவர்களிடமிருந்து பூச்சிகளின் மூலம் பரவுகிறது. இதனை 'இட்ச் மைட்' *(Itch mite)* என்கிறோம். மருத்துவ பாஷையில் "ஸார்கோப்டெஸ் ஸ்கேபி"— *Sarcoptes Scabies* எனப்படும். சிறங்குக் கொப்புளத்தில் ஊசியால் குத்தினால் பூச்சி வரும். இதனை 'மைக்ராஸ்கோப்' எனப்படும் நுண் நோக்கியின் மூலம் பார்த்தால் பயங்கரமாகத் தோற்றும். தினமும் ஏராளமான முட்டைகள் இடும். விரல் இடுக்கு போன்ற பகுதிகளில் முட்டைகள் ஒட்டிக் கொண்டு குஞ்சு பொரிக்கும். பூச்சிகள் தோலுக்குள் குழி பறித்து அரை மில்லிமீட்டர் ஆழம் உட்புகும். முட்டை இட்டவுடனேயே நமைச்சல் எடுக்கும். நகத்தால் சொறிந்தால் அந்த இடம் புண்ணாகும். அதே விரல்களால் எந்தப் பாத்திரத்தைத் தொட்டாலும் நகத்திலுள்ள முட்டைகள் ஆங்காங்கு ஒட்டிக் கொண்டு எளிதில் பரவும். இதற்குச் சிகிச்சை செய்து கொள்ளும் நோயாளி மருத்துவரின் யோசனைகளைத் தீவிரமாகக் கடைப் பிடிக்காவிடில் சில வாரங்கள் அல்லது மாதங்களில் திரும்பவும் வரும். மருத்துவருக்குக் கெட்ட பெயர் வாங்கிக் கொடுக்கும் நோய் இது."

**"இந்நோயினால் நமைச்சல், கொப்புளம் ஏற்படுவது தவிர வேறு வகைகளில் ஏதாவது உபாதை ஏற்படுமா?"**

"சரியாகக் கவனித்துச் சிகிச்சை செய்யாவிடில் சிறுநீரகம் பாதிக்கப்படும் வாய்ப்பு உண்டு. முட்டை, மீன், காய்கறி, பால் முதலிய சத்துள்ள உணவுகளை நோய் கண்டவர்கள் உட்கொள்வது நல்லது."

டாக்டர் **பி. எஸ். சின்னசாமி** கூறக் கேட்டு எழுதியவர்: **ஆர். பி.**

---

## சங்கராலயம்

சென்னை, பெரம்பூரிலிருக்கும் ஸ்ரீ காஞ்சி காமகோடி சேவா சமிதியினர் சென்ற பல ஆண்டுகளாக ஸ்ரீமடம் வகுத்து வரும் பிடி அரிசித் திட்டம், ஆஸ்பத்திரிகளிலுள்ள நோயாளிகளுக்குப் 'பிரசாதம் வழங்குதல்' மாணவர்களுக்கு நீதி போதனை வகுப்புகள் நடத்துதல், பஜனை, வார வழிபாடு முதலிய வற்றைச் சீரிய முறையில் செயல்படுத்தி வருகின்றனர். மேற்படி நற்பணிகளைத் தொடர்ந்து நடத்தவும், விரிவுபடுத்தவும் பெரம்பூரிலுள்ள ஆஸ்திகப் பெருமக்கள் அப்பகுதியில் ஒரு மனை வாங்கி, "காஞ்சி காமகோடி சங்கராலயம்" ஒன்றை நிர்மாணிக்கும் முயற்சியைத் தொடங்கியுள்ளனர். சங்கராலயம் கட்டி முடிக்கக் குறைந்தது ஒரு லட்சம் ரூபாய் தேவைப்படும் என்று எதிர்பார்க்கிறார்கள். இந்த உத்தமப் பணிக்குப் பொருளுதவிசெய்ய முகவரி: ஆர். சங்கரநாராயணய்யர், ஸ்ரீ காமகோடி சங்கராலயக் கட்டிடக் கமிட்டி, 13, மீனாட்சி தெரு, பெரம்பூர், சென்னை 600-011.





# சிலம்புச் செல்வம்!

ம.பொ.சி

உடல் இன்பம் தரப் புகார் நகரிலே பரத்தையர் வேண்டிய பேர் உண்டு. ஆனால், ஒழுக்கத்தோடு கூடிய கலை இன்பம் தர அந்தப் பூம்புகாரிலே மாதவி ஒருத்திதானே உண்டு. இந்த உண்மையை ஓர் இரவிலே புரிந்து கொண்டு மறுநாள் விடிந்ததும் தன் மனைக்குத் திரும்பிவிடுவான் என்றே மாதவி எதிர்பார்த்தாள். அதற்கு மாறாகப் பரத்தையர் குலத்தில் பிறந்த மாதவி மனையைத் துறந்ததுமே நேரே பத்தினியின் இல்லத்துக்குச் சென்றான். அங்கும் தங்காமல் குலமகளைக் கைப்பிடித்து மதுரைக்குப் பயணமானான். பிறர் பாரா வண்ணம் இருள் சூழ்ந்த இரவு நேரத்திலே புகாரிலிருந்து வெளியேறினான். இந்தச் செய்திகளைக் கேட்டதுமே தனது காதலன் பழைய கோவலன் அல்லன்: அவன் ஐம்புலன்களையும் வென்று அறவோனாகி விட்டான். அதுகாறும் பிடித்திருந்த காம வெறியைத் துறந்து விட்டான். —என்றெல்லாம் அவனை மதிப்பிட்டு, தனது தந்தையின் நிலையிலே தன் காதலனை வைத்து, அவனுக்கு மாதவி ஓலை எழுதி அனுப்பினாள். அதனால்,

'' எற்பயந் தோற்கு இம் மண்உடை
முடங்கல்
பொற்பு உடைத்தாகப், பொருள்உரை
பொருந்தியது;
மாசுஇல் குரவர் மலர்அடி தொழுதேன்;
கோசிகமாணி! காட்டு!''

என்று கூறி, கோசிகனிடமிருந்து தான் பெற்ற ஓலையைத் திரும்பவும் அவனிடமே கொடுத்து, அதைத் தன் தந்தையிடம் கொடுக்குமாறு வேண்டுகிறான் கோவலன். ஆம்; மாதவி அனுப்பிய கடிதத்தில் அடித்தல், திருத்தல், புகுத்தல் எதுவும் செய்யாமல் அதை அப்படியே தான் எழுதிய கடிதம் போன்று தன் தந்தைக்கு அனுப்பி வைக்கின்றான்.

மாதவி ஓலையின் வாசகத்தை ''இசை மொழி'' என்கிறார் இளங்கோ. கவிதை நடையில் எழுதப்பட்டது போலும்! கோவலனுக்கு மாதவி அனுப்பிய இரண்டாவது ஓலை இலக்கிய உலகிலேயே மிகவும் புதுமையானதாகும். காதலனைத் தந்தையாகக் கருதுவதும் அவனும் அந்தப் பொருளிலேயே ஓலையை ஏற்று, அதனைத் தன் தந்தைக்கு அனுப்புவதும் புதுமையான நிகழ்ச்சிகள்தாமே!

மாதவியிடமிருந்து தூது வந்த கோசிகனுக்கு விடை கொடுத்தனுப்பிய பின்னர், கண்ணகியைக் கைப்பிடித்துக் கவுந்தியடிகளின் துணையோடு மதுரைப் பயணத்தைத் தொடர்ந்தான் கோவலன். முந்தைய நாட்களைப் போல பகலிலே பாதுகாப்பான இடத்தில் தங்கியிருந்து, இரவு நேரத்திலே வழி நடந்தனர்.

கோவலனுதியர் மதுரை மாநகரை நெருங்கி விட்டனர். இவர்களுடைய வரவைக் கண்டு வையை நதியாள் கண்ணீர் வடித்தாள்.

'' வையை என்ற பொய்யாக் குலக்கொடி
தையற்கு உறுவது தான்அறிந் தனள்போல்
நுண்ணிய நறுமலர் ஆடை போர்த்து
கண்நிறை நெடுநீர் கரந்தனள், அடக்கி''

கண்ணகிக்கு இனி ஏற்படவிருக்கும் துன்பங்களை அறிந்ததால் பனித்த கண்ணீரைக் கண்ணகி காணாமல் மறைத்துக் கொண்டு, அமைதியாக நடை போட்டாளாம் வையை நதியாள். அந்த வையையைக் காட்டி, ''புனல் ஆறு அன்று, இது: பூம்புனல் ஆறு'' என்று கவுந்தியடிகள் கண்ணகிக்குக் கூறினார். கண்ணகியும் கோவலனும் வையை ஆற்றைக் கைகூப்பித் தொழுதனர். ஆற்றைத் தொழுது வழிபடுவதிலே வடபுலத்தவருக்கும் தென்புலத்தவருக்கும் பண்டை நாளிலேயே ஒற்றுமை இருந்தது!

வையை ஆற்றின் வட கரையிலே குதிரை முக ஓடம், யானை முக ஓடம், சிங்க முக ஓடம் ஆகியவை உள்ளன. ஆற்றைக் கடப்போர் ஓடத்தில் செல்வதுதான் வழக்கம். ஆனால், கண்ணகியும் கோவலனும் கவுந்தியடிகளோடு சேர்ந்து மரப்புணை யொன்றில் ஏறி, வையை ஆற்றின் வட கரையைக் கடந்து அதன் தென் கரையினைச் சேர்ந்தனர்.

மதுரையானது தெய்வத் தலமாதலால், அதனை வலம் வருவதில் புண்ணியம் உண்டு என்பது தமிழ்மக்களின் நம்பிக்கை. அதன்படி, கண்ணகியும் கோவலனும் அகழால் சூழப்பட்ட மதுரையை வலமாக வந்து வழிபட்டு, நகரைச் சார்ந்துள்ள புறஞ்சிறை மூதூர் புகுந்தனர். அப்போது கோட்டை மதில் மேலே சுதந்திரக் காற்றால் இப்படியும் அப்படியுமாக அசைந்து அசைந்து ஆடிப் பறந்து கொண்டிருக்கும் பாண்டி வேந்தனின் மீனக் கொடியானது புகார் நகரத் தம்பதிகளின் கண்களுக்குக் காட்சியளித்தது. (தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetout, Madras-600 031.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேயா காசு